ஓம் சக்தி.



ஸ்ரீ அரவிந்த



# யோக விளக்கம்.





பாரத சக்தி நிலயம்

புதுவை.

# யோக விளக்கம்.

---

யோக விளக்கம் ஸ்ரீ அரவிந்தரின் அரும் பெரும் யோக வுண்மையை இனிய, எளிய மொழிகளில் விளக்குகிறது. மனிதன் தன்னுட் பொலியும் வானரசை யடைந்து, எங்கும் கடவுள் கண்டு, கடவுளுணர்வுடன் புற வாழ்வையும் புனிதமாக்கி யுயர்த்துவதே இதன் கருப் பொருள். தன்னுள் தெய்வசக்திக் கனலை யெழுப்பித் தன்னைச் சுற்றிலும் தெய்வச்சுடர் பரப்பி, உலகவாழ்வையும் கடவுளுணர்வில் நிலைப் பெற்ற யோகவாழ்வாக்கலாம் என்பது இதன் உறுதி. நமது பாரத தேசமே இந்த அகண்ட யோக வாழ்வின் சக்தி நிலையம் என்பதை இந் நூல் தெளிவிக்கிறது. தமிழகம் இதன் பொருளை நனித் தறிந்து வாழ்வி லமைத்துப் பயன் பெறுக!

**சுத்தானந்த பாரதி.**

ஓம் சக்தி



# ஸ்ரீ அரவிந்த யோக விளக்கம்.








பாரத சக்தி நிலயம்
புதுவை.

# வெற்றி முரசு!

ஸத்யயுகம் பூத்த தென்று கொட்டடா—தேவ
சங்கமிங்கு வாழ்கவென்று கொட்டடா!
தத்துவத்தை யுட்புறத் துங் கூடினேம்—இன்று
சாவையும் உறுதிகொண்டு சாடினேம்!

வெற்றிமுற்றி சர்வசக்தி விண்ணரசை நாட்டினள்
கொட்டுபேரி கொட்டுபேரி கொட்டுபேரி கொட்டடா!

உயிர்க்குலங் கடவுளன்பி லொற்றுமை—
உலகமெல்லாம் வானளாவு சிற்சபை!
செய்கை யெல்லாந் தெய்வசக்தி லீலையே
சிரித்திலங்கு தான்மவெற்றிக் காலையே!
(வேற்றி)

அச்சமில்லை யில்லையென்று கொட்டடா—
அமுதவாழ்வு சேர்ந்ததென்று கொட்டடா!
உச்சமான சச்சி தானந்தத்திலே!—வந்த
தன்மை ஜீவன் முத்தியென்று
(கொட்டடா! வெற்றி)

ஓம் சக்தி.

# அத்யாத்ம யோகம்*

உள்ளது பரமாத்மா — அவன்
உருவரு வாயுள னுயிர்க்குயிராய்
உள்ளத்தி னுள்ளொளிர்வான் — ஏ
முலகிலுங் கோயில்கொண் டிலகிடுவான்.
தெள்ளொளிக் காலையிலே — புட்கள்
"சிவ"வெனச் சிலம்பிடுஞ் சோலையிலே
வெள்ளிய திங்களிலே — மலர்
விரிப்பென மீனணி வானத்திலே

† கல்வளர் அருவியிலே — "ஓம்
காளி" யென் றெறிதிரை யாழியிலே
"ஹல்" லெனும் புயலினிலே — "ஹரி
ஹரி" யெனு மிடியினிற் கொடியினிலே
முல்லையின் முறுவலிலே — தென்றல்
முத்தமிட்டாடிடுஞ் ‡ சருவலிலே

---

* இதை நொண்டிச் சிந்து மெட்டில் பாடலாம்
† மலை ‡ கொஞ்சுதல்; மருவுதல்

சொல்வகை மதங்களிலே — 'ஹம்ஸஸ்
ஸோஹமேன் " றுரைத்திடு மறைகளிலே

நல்லது பொல்லதிலே — கால
நடப்பினி லேபுதுப் படைப்பினிலே
அள்ளமு தன்பினிலே — வீர
வாண்மையி லேமணிப் பெண்மயிலே
பல்கிய வொருவனவன் — பொருட்
பன்மையெ லாமவன் சின்மயமே
எல்லையிற் பரம்பொருளைக் — கலந்
தேகமுற் றிருப்பது யோகமடா!

சச்சிதா னந்தனவன் — சிற்
சக்தி விலாஸமிங் கத்தனையும்
அச்சுத னிச்சையினுற் — புவி
யாடலி லாவதும் போவதெலாம்
நச்சிடு மனமாயை — பொல்லா
நானெனு மகந்தையைச் சூனியஞ்செய்
அச்சத்தைத் துரத்தியடி — யவ
னன்பறி வருளினி லின்பமுறு.

அனைத்துமிங் கவனெனிலோ — நா
 ஞறெனி லவனன்றி வேறுளதோ?
நினைத்துரு சார்வமுடன் — மனம்
 நிலைத்தவ றுணர்வினி லினித்துவக்கும்.
உனைத்திருக் கருவிகொண்டே — தன
 துளத்தைத் தலத்திடைநடத்திடுவான்;
தனையறிந் தளிப்பவர்க்கே — முற்றுந்
 தனைத்தரு வானவனனைத்தும் வல்லான்.

கடந்துமுக் குணமதிலைத் — தொந்தக்
 கரையுடைத் தானந்த விரிகடலில்
அடைக்கலம் புகுந்திடுவாய் — அக
 மழிந்தவன் றவக்கனல் கொழுந்துவிடும்.
கொடுத்திடு முற்றுமுன்னை — யன்பிற்
 கொடுத்திடக் கொடுத்திட விடுதலையே!
விடுத்திடு மெமபயமும் — பேதம்
 விண்டுல கோடியி ரொன்றுபடும்.

நலமெலாம் நாடிவரும் — தேவர்
 நல்லமு தருவியின் கோடிவரும்

புலன்களிற் காண்பதெல்லாம் — சக்தி
புகுந்துசெய் யாடலென் றகந்தையறும்
பலன்களிற் பற்றுவிடும் — வெற்றிப்
பணியினிற் றெய்வநன் மணங்கமழும்
பொலிந்திடும் புதுவளமை — தெய்வப்
புலமையுந் திறமையும் பொங்கியெழும்.

தத்துவச் சாற்றினிலே — சுத்த
ஸமரஸச் சுதந்திர வூற்றினிலே — ஜீவன்
முத்தி விடாய் தணிப்பான் — அன்பர்
மூச்சிலும்பேச்சிலும்முயற்சியிலும்-ஆத்ம
சத்தி மழைபொழிவான் — பூவிற்
சத்திய யுகங்கொணர் சித்தனையே
நித்தியம் வாழ்த்திடுவோம் — அவன்
நிறைவிற்கிவ் வாழ்வெல்லாம் வேள்வி
[யன்றோ!

———

ஓம் சக்தி.

# யோக விளக்கம்.

---

## யோகம் எதற்கு?

நாம் பயிலும் யோகம் நமக்குமட்டு மல்ல; அது மனிதஜாதிக்கே. முத்திநிலை யோகத்திற்கு அவசியமானதே; எனினும், சொந்த முக்தி (தனக்கே முக்தி தேடுவது) அதன் நோக்கமல்ல; மனிதஜாதியின் விடுதலையே அதன் நோக்கம். தனியின்பம் அல்ல; கடவுளின்பத்தைக் — கிறிஸ்து நாதரின் வானரசு, நமது ஸத்ய யுகத்தை—உலகிற் கொண்டுவருவதே அதன் முயற்சி. தனியாக, மோட்சம் நமக்குத் தேவையில்லை; ஏனெனில் ஆத்மா நித்திய முக்தன்; பந்தம் என்பது மன மயக்கமே. நாம் பந்தப்படுவதாக விளையாடுகிறோம்; நாம் உண்மையில் பந்தமுறவில்லை. ஆண்டவன் விரும்பும்போது நாம் விடுபடலாம். ஏனெனில், அவனே நமது பரமாத்மா; லீலைத்தலைவன்;

அவனுடைய அருளும் ஆணையுமின்றி, எந்த ஜீவனும் ஆடலை நீங்கமுடியாது. இன்பதுன்பம், சுகதுக்கம், புண்யபாவம், போகம், தியாகம் ஆகிய தொந்தங்களின் அனுபவத்தை நமது மனத்தினூடு புகுத்துவது, பெரும்பாலும் நம்முள் விளங்கும் ஆண்டவனிச்சையே: பல நாடுகளில்,யோகத்தைப்பற்றிய நினைப்புமின்றி, நூற்றாண்டு நூற்றாண்டுகளாக, நீண்டகாலம், இந்த லீலையையே அவன் சலிக்காது நடத்திக் கொண்டிருக்கிறான். இதில் தீயதொன்றுமில்லை; இகழ்ந்து, அஞ்சிப் பின்வாங்கத்தக்க தொன்றுமில்லை—இது ஆண்டவன் ஆடல். இவ்வுண்மை தெளிவோனே யறிவாளி; தன்னை முக்தனென்றறிந்தே, அவன் ஆண்டவனின் ஆடலைப்புரிகிறான். ஆடலின் முறைகளை மாற்றுதற்கு, அவன் ஈசனாணைக்கே காத்திருக்கிறான்.

## இந்தியா — ஞானச்சுடர்.

இதோ ஆணை பிறந்துவிட்டது! அனாதகாரியத்திற்காக ஆண்டவன் எப்போதும்

ஒரு சிறந்தநாட்டைத் தேர்ந்தெடுக்கிறான்; கால நிகழ்ச்சிகள், விபத்துக்க ளனைத்தினூடும், சிலர் மூல மேனும், பலர் மூலமேனும், பரம அத்யாத்ம ஞானத்தை அதிலேயே அழியாது வைத்துக் காப்பாற்றுகிறான்; தற் போதைக்கு, இச் சதுர்யுகத்தில், அத்தகை நாடு இந்தியாவே. மடமை தொந்தங்கள், போர், சினம், துயர், தளர்வு தன்னலம், தாமஸ ராஜஸச் சுகங்கள்--இவையெல்லாம் காளியின்ஆடலே. இவற்றிலும் முழு மகிழ்வுடைய ஆண்டவன் சிலகால் விரும்புகிறான்; இது அவனுடைய லீலையின் ஓரியக்கம். இதில் இந்தியா குறுக்கிடக் கூடாமல் தன்னை உள்முகப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பது அவன் விருப்பு; அதற்காகவே, அவளுடைய ஆத்மஞானத்தை மங்க வைத்துத் தளர்விலுந் தாழ்விலும் அவளை ஆழ்த்துகிறான். பிறகு அவன் இந்த மந்த நிலையினின்று எழுந்து, ஆற்றல், அறிவு, இன்பந்துலங்க, நரனிடமுள்ள

நாராயணனைப் பொலிவிக்க விரும்புகிறான்: ஆற்றல், அறிவு, இன்பப் பயன்களை யாக்கும் ஞானத்தை உலகிற்கெல்லாம் இந்தியா வுதவவேண்டுமென விரும்புகிறான். அதற்காக மீண்டும் இந்தியாவில் அத்யாத்மஞானம் பொழிந்து அவளை உயர்த்துகிறான். ஞானத்தின் செல்வாக்குக் குறையும்போது, இந்தியாவில் யோகிகள், உலகைத்துறந்து, தமது முத்தி, இன்பத்திற்காக, அல்லது சீடர்களின் முத்திக்காக யோகாப்யாசஞ் செய்கின்றனர், ஞானம் மீண்டும் கிளர்ந்து பரவுகிறது; பாரதான்மாவும் அதனுடன் விரிந்திலங்குகிறது; அப்போது அவர்கள் மறுபடியும் உலகிடைவந்து, உலகில், உலக முன்னேற்றத்திற்காகப் பாடுபடுகின்றனர் ஜனகன், அஜாதசத்ரு, கார்த்தவீரியனைப் போன்ற யோகிகள், மீண்டும் உலகில் அரியணைவகித்து, நாடுகளைப் புரக்கின்றனர்.

# யுகதர்மம்.

மனிதனிடையே ஆண்டவனுடைய திரு லீலை ஒரு வட்டமாக நடக்கிறது; அது ஸத்ய யுகத்தினின்று கலிக்கும், கலியின்வழியே மீண்டும் ஸத்ய யுகத்திற்கும் செல்லுகிறது. ஸத்ய யுகம் என்பது பொற்காலம்; நற்காலம்; உலகில் நிலையான, நிறைவான ஒற்றுமை விளங்குங்காலம். அப்போது மனிதன் சில கால நியமங்களுக்கும், வரம்புகளுக்கும் உட்பட்டுத் தனது ஜீவ பரிபூரணத்தை யடைகிறான். அவனிடம் ஒரு நிலைத்த பரிசுத்தம் உள்ளது; அதன் பலத்தால் ஒற்றுமை இயல்பாகிறது; ஆனால், திரேதா யுகத்தில், அது கலையத் தொடங்குகிறது; தனி மனிதனிடமும், மனித ஜாதித் தொகுப்பினிடமுமுள்ள உறுதி வலிமையால் அது தாங்கப் படுகிறது; துவாபரயுகத்தில் அது இன்னுங் குலைகிறது; அப்போது, புத்தி நியமம், பொதுஜன சம்மதம், சட்ட திட்டங்களால் அவ்வொற்று

மையை மனிதன் காக்கிறான்; கலியுகத்திலோ, அது முடிவாகத் தவறியழிகிறது. ஆனால் கலி தீதுமட்டுமேயல்ல; புதியவுண்மை, புதிய வொற்றுமை, இன்னும் நிறைந்த பூரணத்திற்கு—புதிய ஸத்யயுகத்திற்கு— வேண்டிய தன்மைகள் அதில் மேன்மேலும் வளர்க்கப்படுகின்றன. இப்போது செல்லான கலிகாலத்தில், பண்டை ஞானமும், நாகரிகமும் மொத்தமாக அழிந்து விட்டதன்பயன் உலகைப் பற்றிக்கொண்டிருந்து, இப்போதுதான் முடிந்தது. வேதங்கள், உபநிடதங்கள், மற்றைப்புனித நூல்கள், உலகின் சிக்கலான ஐதீகங்களில் சிலதுணுக்குகளே நமக்கு எஞ்சியுள்ளன. இப்போது முன்னேற்றந் தொடங்குங்காலம் வந்துவிட்டது. புதிய வொற்றுமையையும், நிறைவையும் நாட்ட வேண்டிய முயற்சிக்கு ஆரம்பகாலம் வந்துவிட்டது. அதனால்தான், மனித சமூகம், அறிவு, மதம், நீதி நெறிகளை நிறைவுறுத்த, எங்கும் இத்தனை உத்தேசங்கள் நடக்கின்றன. ஆனால்

இன்னும், உண்மையான ஒற்றுமை காணப்பட வில்லை.

## அத்யாத்ம யோகம்.

அவ்வொற்றுமையை இந்தியாவே காண வல்லது; சீர்திருத்தம் மட்டும் போதாது; இப்போதுள்ள மனிதவியல்பே மாறவேண்டும்; அதனாலேயே ஒற்றுமையோங்கும்; இம்மாறுதல் யோகம் ஒன்றாலேயே முடியும். தற்கால மனித வியல்பும், பொருள்களியல்பும், முரண்பட்டு, இன்னிசை கெட்ட பாட்டைப்போல இணக்கங் கெட்டிருக்கின்றன. மனிதனின் உள்ளம், செயல், மனம், முற்றும் மாறவேண்டும்; ஆனால் மாறுதல் உள்ளிருந்தரும்பவேண்டும்; புறத்திருந்தல்ல; அரசியற் சங்கங்களாலும், சமூக ஸமாஜங்களாலும் மதக்கொள்கைகள், தத்துவ ஞானங்களாலுங்கூட முடியாது; நம்முள்ளும், உலகிலும் ஆண்டவனைக்கண்டு, அந்த ஆத்மசித்தியால், வாழ்வைப் புதுக்கியமைத்தலாலேயே அம்

மாறுதல் எய்தும். பூரண யோகத்தாலேயே இஃதி யலும். தனி முக்தி, ஆனந்தம்போன்ற ஒரு குறித்த நோக்கத்திற்காகக்கூட இந்த யோகம் செய்யப்படுவதில்லை. நாமும், பிறரும், தெய்வ மனிதராகச் சித்தி பெறுதற்கே இந்த யோகம் செய்யப்படுவது. இக்காரியத்திற்கு, ராஜயோக ஹடயோகக் கிரியைகள் காணுது; அறிவு, அன்பு, வினை, மூவ்வழி யோகமும், போதாது. இவற்றிற்கும் மேற்பட்ட அத்யாத்ம யோகத்தை நாம் கைக்கொள்ள வேண்டும்.

## ஞானம்.

ஞானமே அத்யாத்ம யோகதத்துவம்; நாம் பார்ப்பன; பாராதறிவன வாகிய, மக்கள், பொருள்கள், நிகழ்ச்சிகள், தேவர், அரக்கர், தேவதூதர் எல்லாம் ஒரு சுத்த ப்ரஹ்மம் என்று தெளிவதே ஞானம். அத்துடன், செய லிலும் பாவனையிலும், பராத்பர புருஷனை முற்

றுஞ் சரண்புகவேண்டும்; அவன் பரம்பொருள், அச்சுதன், விஸ்வமூர்த்தி; அவன் ஒரேகாலத்தில், உருவும் அருவும், பரிமிதனும் அனந்தனும், எல்லையுள்ளவனும், எல்லையற்றவனும், ஒன்றும் பலவுமாய் நிலவுவன். வானவர்மட்டுமின்றி, மனிதன் புழு கீழான மண்ணாங்கட்டியிலும் தன்னிருக்கையை அவன் உணர்த்துகிறான். அடைக்கலம் முழுமையாயிருத்தல் வேண்டும். ஆசை, மன்றாட்டம், சொந்த உட்கருத்து, "இதுகூடும் அதுகூடாது, இது ஆகும் அது ஆகாது" எனும் உத்தேசம், முதலிய எதையும் மறைத்து வைக்கக் கூடாது; அனைத்தையுங் கொடுத்துவிடவேண்டும். உள்ளம் ஆசையற்று, புத்தி செருக்கற்றுத் தூய்மையுற வேண்டும்; நலந்தீதெனுந் தொந்தங்களனைத்தையுந் துறக்க வேண்டும்.

கடவுளறிவும், சக்தியும் இன்பமும் அனைத்துள்ளும் மறைந்திலங்குகின்றன. தோன்றும்

உலகையுந் தோன்றுவுலகையும் அவற்றின் ஸப்ரகாசமாகவே அறியவேண்டும். ஒரு யந்திரம், அதை ஒட்டுவோன் கையில் அமைதியாக அமைகிறது, அதுபோலவே கடவுளன்பு, சர்வ வல்லமை, முற்றறிவிற்கு, நமது ஜீவனனைத்தையும் அமைதியாகக்கொடுத்துவிடவேண்டும்; அப்போதே ஆண்டவன் நம் மூலம் தனது காரியத்தையும் ஆடலையும் நிறைவேற்றுவான். நிறையின்பம், நிறைமதி, அறிவு, தெய்வவாழ்வின் நிறைசெயலையும் நமக்கருள ஆண்டவன் முடிவு செய்துள்ளான்; அவற்றை யடைதற்கு நாம் அஹங்காரத்தை வேரோடு ஒழிக்கவேண்டும். இந்தப் பூரண ஆத்ம ஸமர்ப்பணத்தை அரை குறையாக நிலைநிறுத்தினும், யோகக் கிரியைகளின் அவசியம் தானகவே அற்று விடுகிறது. ஏனெனில், அப்போது ஆண்டவனே ஸாதகனும், சித்தனுமாக, நம்முள் விளங்குகிறான். அவனுடைய திவ்ய சக்தி நம்முட் செயல்புரிகிறது. நமது மனித முயற்சியாவின்றி, முற்றுணர்வும்,

முற்றாய்ச்சியும்,பிசகாத் திறமையுங்கொண்ட இயற்கையின் மூலமே அது செயல்புரிகிறது. மிகத் திறமைபெற்ற ராஜயோக ஸம்யமமும், மிகத் தேர்ச்சிபெற்ற பிராணாயாமமும், மிகத் தீவிரமான தியானமும், உன்னத பரவச பக்தியும், மிகுந்த வைராக்கியமுற்ற செயலும், வல்லமையும் பெரும்பயனு முள்ளவையே; எனினும் இந்த மகத்தான தெய்வ சக்தியின்காரியத்தின் முன் அவற்றின் பயன்கள் அற்பமாகவே காண்கின்றன. ஏனெனில், இவையெல்லாம்,நமது மனித வல்லமையால் மட்டிடப்பட்டன. ஆத்ம ஸமர்ப்பணம் செய்தோருள்ளே தெய்வ சக்தி செய்யுஞ் செயல், எல்லையற்ற வல்லமையுள்ளது; ஏனெனில், அது தெய்வ வல்லமை. அவனிச்சையே அதன் அளவு;உலகிற்கும்,உலகோடொட்டியும் ஒட்டாமலு மிருக்கும் நம்மொவ்வொருவருக்கும் எது மிகுந்த நன்மை யென்பதை யவ்விதறியும்.

## 1. ஆத்ம சமர்ப்பணம்.

ஆத்ம சமர்ப்பண ஸங்கற்பமே யோக ஸாதனத்தின் முதற்படி; (சங்கற்பமென்பது மனோ நிச்சயம்.) முழு வுள்ளத்துடனும், முழு பலத்துடனும் உன்னை ஆண்டவன் கைகளில் ஒப்பித்துவிடு. எவ்விதமான நிபந்தனைகளையுஞ் செய்யாதே; ஒன்றுங் கோராதே; யோகத்தில் சித்தி வேண்டு மென்றுகூடக் கேட்காதே; உன்னுள், உன்மூலம்நேராக, அவனிச்சை நடைபெற வேண்டு மென்பதைத் தவிர வேறெதையுங் கோராதே; கோரினோர்க்குக் கோரினதையே ஆண்டவன் கொடுக்கிறான்; எதுவுங் கோராது, தம்மையே முற்றுங் கொடுப்போருக்கோ, அவர்கள் முன்பே கேட்டிருக்கக் கூடியதையும், தேவையையும்அளிப்பதுடன், தன்னையேதந்து தனதன்பிற் பூத்த வரங்களையும் அருளுகிறான்.

## 2. பத்தி, நம்பிக்கை.

தெய்வ சக்தி உன்னுட் செயல்புரிவதைப் பற்றற்றுப் பார்த்திருத்தலே இரண்டாவது

ஸாதனப் படி. இந்த ஸாதனத்தால், உடலில் அடிக்கடி குழப்பமும், இடரும் உண்டாகும்; ஆதலின் பக்தி, (அன்புறுதி) நம்பிக்கை அவசியமானது; ஆனால், எடுத்ததும் முழு நம்பிக்கையுண்டாதல் அரிது; ஏனெனில், தெரிந்தும், கரந்தும், உன்னுள் இடம்பெற்றுள்ள எத்தகைய அசுத்தமும், முதலில் வெளிக்கிளம்பும்; அடியோடொழிக்குமட்டும் மீண்டும் மீண்டும் அது கிளம்பிக்கொண்டே யிருக்கும். இக் காலத்தில் அவநம்பிக்கை அநேகமாக உலகளாவிய அசுத்தமா யிருக்கிறது. ஆனால், உன்னைச்சந்தேகந் தாக்கியபோதிலும், பக்கத்திருந்து அது ஒழியுமட்டுங் காத்திரு; கூடுமானால், ஏற்கெனவே யோக மார்க்கத்தில் முன்னேறிய நல்லோர் கூட்டத்திரு. அத்தகைய ஸத்சங்கங் கிடைக்காவிடின், யோகதத்துவமான ஆத்மஸமர்ப்பணத்தை இன்னும்பலமாகக்கடைப்பிடி. மன க்லேசம்பற்றினும், வெளியிடர்கள் தாக்கினும், கீதையின் மொழிகளை நினை. என்னை?

"மச்சித்த: ஸர்வதுர்காணி
மத்ப்ரஸாதாத் தரிஷ்யஸி"

அதாவது, "உள்ளத்தும் மனத்தும், உன்னை எனக்கு அளி; என்னருளாலே, இடர் விபத்துகள், எல்லாவற்றையுந் தாண்டுவ துறுதி."

மீண்டும்,

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ

அஹம் த்வாம் ஸர்வ பாபேப்யோ
மோக்ஷ யிஷ்யாமி: மாசுச!

"அறங்களனைத்தையும் அறவே விடுவாய்! (உனது முற்பழக்க வழக்கம், ஐதிகம், பிறரால் உனக்கு விதிக்கப்பட்ட விதிநியமம், நெறி, சட்ட திட்டங்கள் அனைத்தையும் விடுக) என்னையே சரண் புகு! தீமைபாவமனைத்தினின்றும் உன்னைவிடுவிப்பேன். வருந்தாதே" என்னும்

மொழிகளை நினை. "நான் விடுவிப்பேன்" —— பொறுப்பு உன்னதல்ல; பயன் உன் முயற்சிகளைச் சார்ந்ததல்ல; நீ யேன் வருந்தி யிடர்ப் படுகிறாய்? உன்னினும் வல்லவன் காரியத்தைத் தீவிரமாக மேற்கொண்டுள்ளான். பிணி, துயர், தீமை, அசுத்தக் கிளர்ச்சி—எதுவும் எவ்வகை யிலும் உனக்குத் திகிலுண்டாக்கக் கூடாது. ஆண்டவனைச் சிக்கெனப் பற்று. "நான் உன்னைப் பாபம், தீமை யனைத்தினின்றும் விடுவிப் பேன்" ஆனால் திடீரென்று ஒரு அற்புதச் செயலால், விடுதலை வருவதில்லை. சுத்த ஸாதனத்தாலேயே அது வரவேண்டும்; இவ் விடர்களெல்லாம் அக் காரியத்தின் பங்கே. நீண்ட காலம் கூட்டாதிருந்து ஒருநாள் பெருக்கும் அறையில் மேகப்படலம்போலத் தூசி கிளம்பு மல்லவா? அதைப்போன்றதே அவ்விடர்களின் கிளர்ச்சியும். அத்தூசி உன்னைத் திணறடித் தாலும் அப்போதும் "மா சுச" "வருந்தாதே" என்னும் வாக்கை நினைந்து உறுதியாய் நில்.

## சாட்சியாயிருப்ப தெப்படி?

உன்னைப் புருஷனென்றறியவேண்டும்; அப்போதே நீ ஒதுங்கி (காரியங்களுக்குப் பற்றற்ற சாட்சியாய்) இருக்கமுடியும்; புருஷன் (புருஷோத்தமனை) கடவுளின் செயலைச் சம்மதித்து (சாட்சியாக) கவனிக்கிறான்; ஆதாரத்தை, மலர்த்தி, ஆண்டவன் அருளும் பயன்களையனுபவிக்கிறான். சக்தியாய் விளங்குங் கடவுளான காளியாலேயே காரியம் நடைபெறுகிறது. அதை அவள் கண்ணனுக்கே வேள்வியாய் அளிக்கிறாள். நீ வேள்வி நடப்பதைப் பார்த்துக்கொண்டிருக்கும் யஜமானனே. வேள்வியின் ஒவ்வொரு காரியத்திற்கும் நீ இருக்க வேண்டியது அவசியம்; நீ வேள்விப் பயன்களைப் (அவிர்பாகம்) புசிப்போன். ஆதாரம் இன்ன தென்றறிந்தால் "செய்வோன் நான்" என்னும் கர்த்ருத்வ அஹங்காரந் துறந்து பற்றற்றிருத்தல் உனக்கு மிகவும் எளிதாகும்.

ஆதாரத்தின்பலபாகங்கள் "யோகஸாதனம்" என்னும் நூலில் விளக்கப்பட்டுள்ளன; ஆனால் இப்போது விழித்துள்ள உடல், உயிர்; சித்தம், மனஸ், புத்தி, அஹங்காரம் ஆகிய அந்தக்கரணம் இவற்றைக் குறித்தே அதில் விவரிக்கப்பட்டுள்ளது. (இந்த யோக விளக்கத்தைத் தெளிவுபடுத்த வேண்டி யோக ஸாதனம் என்னும் நூலின் சுருக்கத்தை ஈண்டு காண்பாம்.)

## யோக சாதனம்.

### கீழாதாரங்கள்.

வாழ்வு ஆனந்தம், சக்தி; அது மாயையல்ல; கனவல்ல, அனைத்தும் ப்ரஹ்ம மயம். உள்ளது அதுவே; அதுநான்; சர்வேசனுடன் நான் ஒன்றுபட்டவன், என்று விழிப்புற்றெழு! அவனொருவனே பலவாக விளங்குகிறான். அவன் எல்லையற்றவன்; அனைத்துள்ளும் அப்

படியே விளங்குகிறான். அந்தக்கரண சுத்தி பெறு; அகந்தை யொழி; ஸர்வாரம்ப பரித் யாகியாய், செயல், பயன் இரண்டையும் ஆண்டவனுக்கே உரிமையாக்கு; சூரியன், சந்திரன், விண் மீன்கள், காற்று, புயல், பனி, தீ, பூ இவை இயல்பாக ஒரு சக்தியால் இயக்கப் பட்டுச் செயல்புரிகின்றன. அப்படியே, ஈசுவர சக்திக்கு உன்னை முற்றும் உரிமையாக்கு; நிறைவான அமைதி, அறிவு, அடைக்கலத் துடன் உன் வாழ்வைப் புருஷோத்தம வேள்வி யாக்கு. உனது தெய்வத்தன்மையை நம்பு; கடவுளையும், தெய்வ சிற்சக்தி காளியையும் நம்பு.

சக்தியைப் பெறு; சக்தியே யோகத்திற்கு அடிப் படை. ஜீவ ஸ்வபாவத்தைக் கருவி யாகக் கொண்டு சக்தியே ஆண்டவனிச்சை யால், கால தேச வர்த்தமானங்களுக்கேற்றபடி உலகலீலையை நடத்துகிறாள். அனைத்தும் கட வுளே. இந்த ஞானத்தைப் பெறு; ஞானத்

தால் சித்த சுத்தியடை; ஆசையேறிய பிரா ணனை யடக்கு; மனச் சாந்தி பெறு; இவற்றால் அமரவாழ்வையும் அழியா வுடலேயு மெய்து.

தலை யுச்சியில் ஸஹஸ்ராரம் உள்ளது; அதுவே சக்தி பீடம்; அதன்கீழ், மூளைக்கு உயர, உன்னத புத்தி உள்ளது; அதன்கீழ் மூளைக்கிடையே தாழ்ந்த புத்தி (தர்க்க புத்தி) யுள்ளது. இன்னும் கீழே, மூளையின் அடிப் பாகத்தில், மனத்துடன் உறவாடும் தெரிவு (understanding) உள்ளது. ஞானம், பகுத்தறிவு, வுணர்வு இம் மூன்றும் மூளையின் பங்குகள்; இவை சூக்ஷ்ம சரீரத்தி லுள்ளன. இருதயத்திற்கு மேலே இந்திரியத்தையாளும் மனஸுள்ளது. இருதயத்திற்கும் நாபிக்கும் நடுவே சித்த முள்ளது. அதன் கீழே சூக்ஷ்மப்ராண னுள்ளது. நரம்புத் தொகுதியும் (ஸ்தூல ப்ராணன்) ஊனுடலும் சேர்ந்தே தூல தேகமாகும். இவையனைத்தின் மூலமும் ஆண்டவனின் இச்சா சக்தியே செயல்புரிகிறது; அதுவே அறிவிற்கும் நினைப்

பிற்கும் புத்தியையும், புலனுணர்விற்குமனதை யும், வேக எழுச்சிகளுக்குச் சித்தத்தையும், போகத்திற்குப் பிராணனையும் கையாளுகிறது. ஒரு யந்திரத்தின் பங்குகள் தத்தம் வேலையை, முரணின்றிச் செய்வதுபோல, மேற்சொன்ன தத்துவங்களும் ஒன்றிலொன்று இடைப்புகாது, முரணின்றி யந்திரியான புருஷனின் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடந்தால் எல்லாம் ஒழுங்காயிருக் கும். சக்தியே ஜீவயந்திரத்தின் மின்ஸாரம்.

இந்த சக்தி, தாமதமும், அவநம்பிக்கை யும், குறைகளுமுள்ள மனிதவியல்பைக் கைக் கொண்டு அதன் மடமையை முதலில் ஒழிக்கி றது. பிறகுஆதாரத்தைச் சுத்தப்படுத்துகிறது. அன்னம், பிராணன், மனம், அதிமனம் அல்லது விஞ்ஞானம், அத்யாத்மம் அல்லது சச்சிதானந்தம் என ஆதாரம் ஐவகைத்து. மனித வியல்பை மாசுறுத்தும் பிடிவாதம், ஐயம், இணங்காமை, பிழையான ஸம்ஸ்காரங்கள், ஆசாபாசங்கள் இவற்றினின்று விடுபட்டு, ஆதாரத்தைப் பரி

சுத்தமாக்கி, சக்திக்கு மலர்த்தவேண்டும். ஞானத்தாலேயே பரிசுத்தம் எய்தும். ஞான மேன்பது கடவுளுணர்வு. உள்ளுணர்வு, உலகுணர்வு, அத்யாத்மவுணர்வு இம் மூன்றும் சேர்ந்ததே ஞானம். அத்யாத்மவுணர்வி னின்றேயோகி மற்றதைப் பெறுகிறுன். அவன் தன்னுள் ளனைத்தையுங் கண்டறிகிறுன். சுத்த புத்தி, சாந்த மனம் ஆத்மாநுபவம், அத்யாத்ம ஐக்கியம் இவற்றுல் எதன் உண்மையையும் யோகி தன்னுள்ளே பளிச்சென்றறிகிறுன்.

மனம் ஐம்புலக் காட்சிகளைப் பெற்றுக் கொள்வதுடன், விக்ஞானத்தினின்று சித்தத்திற்கு வரும் சாதாரண எண்ணங்களையும் வாங்கிக் கொள்ளுகிறது. இப்புலக் காட்சிகளும் சாதாரண எண்ணங்களுஞ் சேர்ந்தே தெரிவு. மனம் உணர்ச்சிக் கருவி; நினைப்புக் கருவியல்ல. புத்தியினின்று சித்தத்திற்கு வரும்வழியிலேயே அது எண்ணங்களை கிரகித்து, விஷயங்களாக்கு

கிறது. விலங்குகளுக்குப் புத்தி மந்தம்; புலனறிவே அவற்றிற் குண்டு. மனிதனே, புத்தியால் அதீந்திரிய வஸ்துக்களையும் கிரகிக்க வல்லவன். உடனே புத்தியால், ஒன்றின் உண்மையைக் காண வல்லவன். யோகியின் புத்தி எதையும் மிக நுட்பமாக அறிய வல்லது. மனம் எப்போதும் விஷயங்களிற் சலித்துக் கொண்டேயிருக்கிறது. அதை யடக்கவேண்டும்; அப்போதே பூரணஞான மெய்தும். சித்தவ்ருத்திகளை விலக்கு. புலன்களாற் காண்பதற்குப் பதில் புத்தியால் பொருள்களைக் காண். இதற்குப்ராகாம்யம் என்று பெயர். இதனல் பொருள்களை எல்லையற்ற காட்சித்திறனுடன் நுணித்தறியலாம். புத்திக்கும் சித்தத்திற்கும் ஒரு பாதையாகவே மனம் இருத்தல்வேண்டும். சக்தி வளர்;ஞான விளக்கேற்று; மனத்தையும் தாழ்ந்த புத்தியையும் சக்தியால் அடக்கி ஞானத்திற்கு இடமாக்கு.

சித்தம் வேக எழுச்சிகள், நினைப்புகள் ஆகிய இரண்டடுக்குகளைக் கொண்டது. கண்டு,

எண்ணி யுணர்ந்து அனுபவித்த விஷயங்கள் அதிற் பதிந்துள்ளன. இறந்தபின் இப்பதிவுகள் சூக்ஷ்ம சரீரத்துடன் சென்று, ஜீவன் மறுபிறப் படையும் போது மூலாதாரத்தில் ஸம்ஸ்காரங் களாகப் படிகின்றன. மனமடங்குமட்டும், யோகத்தடையான இந்த ஸம்ஸ்காரங்கள் புத்தி நினைவால் கிளம்பிக் கொண்டேயிருக்கும். எழுச்சிகள், இச்சா சக்தியினின்று இறங்கிச் சித்தாவேகங்களாக மாறுகின்றன, நினைப்பு, உணர்வு, செயல் என வேக எழுச்சிகள் மூவகைத்து. நினைப்பு வேகங்களே இயலறிவு, ஆவேசம் நுண்ணறிவு, சகஜஞானம் எனப் படுகின்றன. அவை புத்தியின் வழியே சித்தத்திலுறைந்து, சமயத்தில் ஆவேசத் துடன் கிளம்புகின்றன. பக்தி, புலமை, கவித்வம் இவை இதனின்றே யூகத்துடன் கலந்து உண்டாகின்றன. அன்பு, துணிவு, உண்மை, சீர்மை முதலியன தர்ம எழுச்சிகள், இயல்எழுச்சிகள்;வெறுப்பு, அச்சம் பொய்,சிறு மைகள்,அதர்ம எழுச்சிகள், விகார எழுச்சிகள்,

விகார எழுச்சிகளை யறவே யொழித்து, யோகியானவன் தர்ம எழுச்சிகளை வளர்த்துத் தன்னலம் விடுத்து, ஏவப்பட்ட காரியங்களையே செய்தல் வேண்டும். விக்ஞானத்தின் ஆதேசத்தாலேயே செயல்புரிய வேண்டும். மனத்தை யடக்கிப் பழைய ஸம்ஸ்காரங்களை யொழித்து, கீழான சித்தாவேகங்களை யடக்கி, ஆத்திர மின்றி, சக்தியாணையாற் செயல்புரிக. மன மடங்கினல் உள்ளமைதி யெய்தும்.

பிராணன் மனத்திற்குஞ்சித்தத்திற்குங்கீழே, சூக்ஷ்மதேகத்தில் ஊன்றி, நாபியில் ஸ்தூலத் துடன் சேர்ந்துள்ளது. தூலத்தையும் மனத்தை யும் அது இணைக்கிறது. சூக்ஷ்ம ப்ராணன் சூக்ஷ்ம சரீரத்திலும், ஸ்தூலப்ராணன் தூல நரம்புக ளிலும் சஞ்சரிக்கின்றன. சூக்ஷ்ம ப்ராணன் ஆசைக்கிருப்பிடம்; அதைச் சுத்திசெய்தல் அவ சியம். ஞானத்தால், அந்தக்கரண சுத்திய டைந்து புதியவுள்ளமும் மனமும்பெற்றே பிடி

வாதமான ஆசைப்பேயை வெல்லலாம். நல்லது பொல்லது எல்லா ஆசையும் ஒழிதல் வேண்டும். ஆண்டவனுக்கு உன்னைக் கொடுத்துவிடு; இது வேண்டும் அது வேண்டும் என்னும் வேட்கையை வேரறு! விருப்பு வெறுப்புகளை நீக்கிச் சமதைப் பூணு. ஆசை யொழிந்து குணவிகாரமும் இல்லேல், சுத்த போக முண்டாகும். குணாதீதனாக இரு; ஆனந்தப் பிரமத்தை யடைவாய்; அப்போது எங்கும் சாந்தம், சிவம், சுந்தரம், மங்களந் துலங்கக் காண்பாய்.

சூக்ஷ்மமும் தூலமும் சேர்ந்ததே உடல் வாழ்வு. இவற்றின் பிரிவே சாவு. இரண்டையும் சேர்ப்பது பிராணன். சுத்த முத்தன் உடலை எப்படி வேண்டினும் இயக்கலாம். உடலை சக்தியிடம் ஒப்புவித்துவிடு. சுத்த புத்தியாலேயே காய சுத்தியாகும். இதுவே யோக ஸாதனச் சுருக்கம்,

## கடவுளரசு.

புத்தியே மனத்தின் உச்சமான விர்த்தி; அதற்கு மேலேயே உன்னத புத்தி அல்லது விக்ஞானமுள்ளது; அதுவே ஸத்ய தர்மத்தின் இருப்பிடம். அதுவே ஞான தத்துவம், பாவனாதத்வம்,

கிரியாதத்வம் (தத்வ=உண்மை) எல்லாம். இதுவே உண்மைத்திறன். இதற்குமேலேயே ஆனந்தம், விஸ்வானந்தம், உள்ளது. அதிலேயே உனது தெய்வத்தன்மை விளங்குகிறது. "உன்னுள்ளிலங்கும் கடவுளரசு" என்று கிறிஸ்துநாதர் மொழிந்தது இந்த விக்ஞானத்தையும் ஆனந்தத்தையுமே. உடலுயிர் மனமான கீழ் வியாபாரங்களில், நாம் இப்போது ஜாக்ரதரா யிருக்கிறோம். (விழிப்புற்றிருக்கிறோம்.) விக்ஞானம் ஆனந்தத்தில் ஸுஷுப்தராயிருக்கிறோம் (உறங்கிக்கொண்

டிருக்கிறோம்): இந்த விக்ஞான ஆனந்த சேதனத்தை இப்போது நாம் விழிப்புறுத்த வேண்டும்; அவற்றின் விழிப்பும், கலப்பற்ற செயலுமே யோக சித்தியாகும்; ஏனெனில், அவ்விழிப்பெய்துகையில், கீதை சொல்வது போல நாம் ஆண்டவனில் வசிக்கும் நிலை யெய்துகிறோம். "நீ என்னிலேயே வசிப்பாய்" எனக் கீதை கூறுகிறது. ஒரு முறை அதை யடைந்துவிடின், பிறகு நாம் சுதந்திரானந் தர்களே; நாம் முயன்றதெல்லாம் அத் தோடு கைகூடிவிடும்.

## 3. அனைத்தும் ஆண்டவன்.

எல்லாப் பொருள்களையும் ஆண்டவனாகக் காண்டலே யோகத்தின் மூன்றும் படி. முத லில், ஞானவளர்ச்சி யடையும்போது, ஒரு நிர்க்குண தெய்வ ஸத்து, (ஸதாத்மா) சாந்தனாக, அலக்ஷணமாக, அசைவு, பேதம்,

வடிவின்றி இடத்தையும் காலத்தையும் வியாபித்திருப்பதைக் காணலாம்; அதிற் பெயர் வடிவுகள் இருப்பதும் சந்தேகமாகவும், அற்ப வுண்மையாகவுமே தோன்றும். இவ் வனுபவத்தில், ஒன்றே உண்மை மற்றதெல் லாம், வீணன, அநிர்வசநீய மாயையென்றே தோன்றலாம். ஆனல், இந்த நிர்க்குணனு பவத்தளவில் மிதப்பட்டு நின்று விடாதே; இன்னும் மேலே செல்லுங்கால், அதே ஆத் மனே சிருட்டிப் பொருள்களனைத்தையும் வகித்துத்தாங்குவதுடன், அதுவே அனைத் திலும் அறிவாய் நிறைந்ததென்றறிவாய்; முடி வாகப் பெயர் வடிவுகளும் பிரஹ்மமேன்றே நீ யறிந்துகொள்வாய். பிறகு உபநிடதங்களும் கீதையும் விதிக்கும் நெறிவழியே மேன் மேலும் உனக்கு வாழமுடியும்;

"ஆத்மானம் ஸர்வ பூதேஷு
ஸர்வ பூதேஷு சாத்மனி"

என்றபடி தன்னையே அனைத்தனும், அனைத்தையும் தன்னுளும் காண்பாய். ஸர்வம் கல்விதம் ப்ரஹ்மா, எல்லாம் பிரம்மமே என்றுணர்வாய். உலகெல்லாம் ஒரு அனந்த தெய்வமூர்த்தியின் லீலாவிலாஸம் என்றறிவதே இந்த யோகானுபவத்தின் மகுடமாகும். பிரபஞ்சத்தின் ஆதாரமான நிர்க்குண ஸதாத்மனையே அனைத்திலும் காணும் அறிவை நீ யிழக்கமாட்டாய்; ஆனல் அத்துடன், அனைத்திலும் ஸ்ரீ கிருஷ்ணனையே காண்பாய்; அவன் அவ்யக்தவ்யக்தபரன். தோன்றும் உலகம், தோன்றாவுலகம் அனைத்தும் அவனே; அவனே அனைத்திற்கும் ஆதாரம்; அனைத்திற்கும் அப்பாலாய் நிற்போனும் அவனே. ஸதாத்மனுக்குப் பின்னே அஸதாத்மனின் மோனமுள்ளது; "இல்லை" என்னும் புத்தர் இதையே சூனியமென்றறிந்தனர்; இந்த மோனத்திற்கப்பால் பராத்பர புருஷன் (புருஷோவரேண்ய ஆதித்ய வர்ணஸ் தமஸப் பரஸ்

தாத்) புருஷோத்தமன், சுடரோன், இருளைக் கடந்தவன், இருக்கிறான். அவனே தனது ஸத்திலிருந்து இவ்வுலகைப்படைத்தான்; அவனே அனந்தனும் ஸந்தனும், எல்லையற்றவனும், எல்லையுள்ளவனுமான ஈசுவரன், சிவன், நாராயணன் லீலா மயனான ஸ்ரீ கிருஷ்ணனாகி, உலகெங்கும் விளங்கி அதைத் தாங்குகிறான். அக்கண்ணனே, தனது பிரேமையால் நம் மனைவரையுந் தன்பாலிழுத்துத் தனது யோகசித்திகளால் வசப்படுத்தி, இப் பல பான்மையுலகில் இன்பம், சக்தி, அழகுபொலியும் தனது நித்திய லீலையைப் புரிகிறான்.

## ஜடப்பொருளும் அவனே.

இவ்வுலகம் அவனுடைய சச்சிதானந்த லீலையே. தூலப் பொருள்கூடக் கேவலம் ஜடமல்ல; உயிரற்ற பொருளல்ல; அதுவும்

ஒரு உணர்வு வடிவு; குணப்பொருள்; புலனறிவாற் காணப்படுங் குணத்தன்மையென்பதை ஒருநாள் நீயறிவாய். குணங்கள், நிலைப்பு, திட்பம், சேர்க்கை, ஒரு உணர்வுநிலை இவற்றின் பொருத்தமே கன பரிணாமம். ஜடம், உயிர், மனம், மனத்திற்கப்பாலுள்ளது எல்லாம் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவே; அவன் அனந்தகுண ப்ரஹ்மன்; உலகில் சச்சிதானந்தனாக விளையாடுகிறான். இவ் வனுபவமெய்தி, அதிலேயே எப்போதும் உறுதியாக நிலைத்தால், துயர், பாவம், அச்சம், மாயை, உட்கலகம், நோவு அனைத்தும் பலமாக நம்மைவிட்டு வெளி முடுக்கப்படுகின்றன.

ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வான்
ந பிபேதி குதஸ்சந.

ப்ரஹ்மானந்தன் உலகி லெதற்கும் அஞ்சான், எனும் தைத்ரிய உப நிடதத்தின் உண்மை

யை அப்போது நமது அனுபவத்தில் சாட்சாத்கரிக்கிறோம். பின்னும்,

"யஸ்மின் ஸர்வாணி பூதானி
ஆத்மை வாபூத் விஜாநத:
தத்ர கோ மோஹ: க: சோக:
ஏகத்வ மநு பச்யத:"

விஞ்ஞானி, ஆருயிரனைத்தையும் ஆத்மாவுடன் ஒன்றாகக் காண்கிறான். அனைத்திலும் ஒன்றையே காண்போனுக்கு (அனைத்தையுந் தானாகக் காண்போனுக்கு) மோஹமும் சோகமும் ஏது? எனும் ஈசோபநிடத வுண்மையையும் சாட்சாத்கரிக்கிறோம். அப்போது உலகனைத்துமே புது விதமாகக் காண்கிறது. அழகும், நலமும், ஒளியும், களிப்பும், பொங்குங் கடலாக, நித்திய சக்தியும், சாந்தமும் பொலியும் ஒரு வெற்றி யியக்கமாகவே காண்கிறது. சுபம் சிவம், மங்களானந்த மயமாகவே அனைத்தை

யுங் காண்கிறோம். அனைத்துயிருடனும் ஆத்ம வொற்றுமை யெய்துகிறோம். (சர்வ பூதாத்ம பூதாத்மா); இவ்வனுபவம் நிலைத்து சகஜ மானால், உறவு, ஒன்றிப்பு, அன்பு விரிவால் பிறருக்கும் அதைப் பரப்புகின்றவராகிறோம்; அப்போது நமது உலகெல்லாம் (அனைத்தி லுந் தன் மயங்காணும்) இந்த ப்ரஹ்ம ஸ்தி தியைக் கதிர் பரவச் செய்ய நாமே நடுக்க ளாகிறோம்.

சேதனப் பொருள்களன்றி, அசேதனங் களிலும் நாம் நாராயணனைக் காணவேண்டும்; சிவானுபவம் பெறவேண்டும்: சக்தியை யணைய வேண்டும். இப்போது நமது விழிகள் தூல பாவனையால் மூடுண்டிருக்கின்றன; அவை பரஞ்சோதியைக் காணும்போது, எதுவும் அசேதனமல்ல; விளங்கியோ விளங்காமலோ, உட்பட்டோ, வெளிப்பட்டோ, மறைந்தோ, தெரிந்தோ அல்லது தெரிந்து கொண்டிரு

ங்தோ வுள்ள பொருளெதுவும் அசேதன மல்ல என்றறிவோம்; நாம் அன்னம் அல்லது ஜடம் என்பதில் சேதனம் (அறிவு) உள்ளடங்கியுள்ளது; அத்துடன் பிராணன், மனம், விக்ஞானம், ஆனந்தம், ஸத், சித் (உயிர், மனம், உயர் அறிவு, இன்பம், தெய்வ சக்தி, உண்மை) இவையனைத்தும் அதனுள் ளடங்கி யுள்ளன. எல்லாவற்றிலும் தெய்வத்தின் சின்மய மூர்த்தியே யமர்ந்து குணானந்தம் பருகுகின்றது. பூக்கள், பழங்கள், மண், மரங்கள், உலோகங்கள், அனைத்திலும் ஒரு ஆனந்த மிருப்பதை நீ யறிவாய்.; ஏனெனில், அனைத்திலுங் திருக் கண்ணனே கோயில்கொண் டிலங்குகிறுன்; தானே அனைத்திலும் புகுந்தொளிர்கிறுன். எப்படி? தூலமாகவா? அப்படி யொன்றுமில்லை; இடமும் காலமும், சங்கேதங்களும், காட்சியணிகளும் தெய்வ சிருட்டிக் கலை விளக்கமுமேயாகும்; தனது பராத்பரத் தன்மயத்தின் திவ்யசேதனத்தாலேயே அவன் அனைத்திலும் நிவசிக்கிறுன்.

ஈசா வாஸ்ய மிதம் ஸர்வம்
யத்கிஞ்ச ஜகத்யாஞ் ஜகத்

இவ் வுலகனைத்தும், இப் பிரகிருதி யுலகின் ஒவ்வொரு பொருளும், ஈசனுக்கு உறையுள் ளாகவே படைக்கப்பட்டது.

## செயலும், பயனும் தெய்வத்திற்கே.

ஆருயிரனைத்திலும் ஆண்டவனைக் காண்பது மட்டும் போதாது; நிகழ்ச்சிகள், செயல்கள், நினைப்புகள், உணர்வுகள் அனைத்திலும், உன்னுளும், மற்ருேருளும், உலகனைத்திலும் அவனைக் காணவேண்டும். இவ் வனுபவத்திற்கு இரண்டு ஸாதனங்கள் அவசியம். முதலில் உனது செயற்பலனை முற்றும் அவனுக்களித்து விடவேண்டும்; இரண்டாவது செயல்களையும் அவனுக்கே உரிமையாக்கவேண்டும். வினைப் பயன்களை யளிப்ப தென்பது, பலன்களில்

வைராக்கியம் பூண்டு விலகிச் செல்வதல்ல; அல்லது குறித்த நோக்கத்துடன் செயல்புரிய மறுத்தலல்ல. இது வேண்டும், அ.தாக வேண்டும், இது அல்லது அது நிகழவேண்டும், அது பலிப்பதற்கு உன்செயல் இன்றியமையாதது என்பதற்காகச் செயல்புரியக் கூடாது; இது செய்தகுவினை; எனது ஜீவநாதன் ஆணை. ஆண்டவன் எப்பயனை யளித்தாலுஞ் சரி; அதைச் செய்வதே கடன், என்னும் உறுதியுடன் செயல்புரியவேண்டும். உன் சொந்த விருப்பத்தைக் கட்டி வைத்துவிடவேண்டும்; ஆண்டவன் வேண்டுவதென்னவென்பதை யறிந்துகொள்ளவேண்டும், உன்னுள்ளம், உன் மனோவிகாரங்கள், உன்மாமூல் அபிப்ராயங்கள் சரியென்றும், அவசியமென்றும் மதிப்பதை யெல்லாம் நம்பாதே; அவற்றைத் தாண்டிச் செல்; கீதையில் அர்ஜுனன் செய்ததுபோல, ஆண்டவன் "சரி, அவசியம்" எனக் குறித்ததையே பறிய முயல். செயத்தக்கதைச்செய்து

முடி; அதன்பயனாக, நீ விரும்பி எதிர்பாராத தாயினும், நேர்மையும் தேவையுமான பொரு ளனைத்துங் கைகூடியே தீரும்; இதைத் திட மாக நம்பு. உலகாளும் சக்தி உன்னினும் அறி விற்குறைந்ததல்ல; உன்னை யோசனை கேட்டு, உன் போக்குப்படியே உலகை நிர்வகிக்க வேண்டியது சற்றும் அவசிய மில்லை; கடவுள் அதைக் கவனிக்கிறார்.

## செயத் தக்க வினை.

ஆனால், செயத்தக்க செயல் (கர்த்தவ்யம் கர்மா) என்ன? குறிப்பது மிகக் கடினம் (கஹநா கர்மணோகதி:); கர்த்தவ்யம் கர்மம் (செயத் தக்க வினை) என்பதைப் பலர் (Duty) கடமை என்ற ஆங்கில மொழியிலும் பாவனை யிலும் மொழி பெயர்ப்பர், அதை விளக்கச் சொன்னால், நேரான நீதிச்செயல் என்பர்; எதை நேர்மை, நீதியென்று மக்கள் அறிகின்

றனரோ, எதைச் சரியென நீ யுணருகின்ருயோ, அல்லது, சமாஜம், ஸமூகம், ஸமுதாயம் அல்லது மனிதஜாதி எதை நலமென வேண்டுகிறதோ அதைச் செய்வதே அக் கடமை யென்பர். அறியா மாக்களின், ஓலமிடும் ஆசைகளை அல்லது தனி யகந்தையை யடக்கிப் பழக்குதற்கே கடமை என்னும் இச் சொந்த அல்லது சாமாஜக் கருத்துக்கள் வேண்டியன; இவற்றிற்கட்டுபட்டவன், "நல்ல மனிதனுக" உலகிற் காண்பான்; ஆனுல் இந்த யோகத்தில் அவன் ஒருக்காலும் சித்திபெற மாட்டான். ஒருவகைப் பயனுசைக்குப் பதிலாக மற்ருெருவகைப்பயனுசையையே அவன் கொள்ளுகிருன்; இச் சிரியபயன்களுக்காக, இன்னும் ஆத்திரத்துடன் முயன்று, அவற்றை யடையாவிடின் இன்னும் கடுமையான துன்பமடைகிருன். "நான் பரோபகாரி" என்பவனின் மோகத்தினுங் கொடிய பற்று வேறில்லை. "நான் ஸந்பார்க்கி" என்னும்

வேரூன்றிய அகந்தையினும் பிடிவாதச் செருக்கு வேறில்லை; ஏனெனில் அது தனக்கே ஞாயமெனத் தோன்றுகிறது; மனிதர் விழி முன்னுஞ் சரியெனத்தோன்றுகிறது; தன்னினும் உயர்ந்த (அத்யாத்ம) தர்மத்திற்கிணங்க வேண்டிய தவசியமென்று அதற்குப் படுவதில்லை. விளையும் பயன்களுக்காக வருங்காவிடினும், ராஜஸ கர்த்தாவின் பிரயாசை, போராட்டம், தடுமாற்றம், சண்டை, ஆவலாதி, களைப்பு, முக்குணங்களுக்கு அடிமைத்தனமுதலியன அதிலுள்ளன. முக்குணங்கடந்தவனின் (திரிகுணாதீதனின்) சாந்தம் அதிலில்லை. அது குணங்களுக்கே கட்டுண்டிருக்கிறது.

## சாத்திரம்

தனக்குப் புண்ணியம், ஸமாஜக் கடமை என்னும் இந்த எண்ணங்களுக்கு ஆட்பட்டே (குருக்ஷேத்திரத்தில்) அர்ஜுனன் போர் செய்ய மறுத்தான். அவன் பேசிய நியாயங்களுக்கு மறுப்பாகக் கண்ணபிரான் இரண்டு அபிப்பிராயங்களைச் சொன்னான்:—(க) சாத்திரம்; (உ) வினைப்பயன்களுடன் வினையையும் ஆண்டவனுக்கு அர்ப்பணித்தல். முதலாவது தாழ்ந்தது; கட்டுப்பட்டு முத்தி விரும்பும் மனிதனுக்கு வேண்டியது. இரண்டாவது உயர்ந்தது; முக்தனுக்கு வேண்டியது. சாத்திரங்களின் நலமென்ன? நமது சொந்த ஆசைகள், ஏதுவாதங்கள், மனோவிகாரங்கள், பக்ஷபாதங்கள், தன்னலம், செருக்கு, இவற்றைத் தாண்டிய ஒரு விதிப்ரமாணத்தை வரையறுத்ததே அதன் நலன்; நல்லுணர்வுடன் அதன்வழி நிற்பதால், நமக்குத் தன்னடக்கம்

ஏற்படுவதுடன் ஸாத்வீக அஹங்காரமும் கூடு மட்டுங் குறைகிறது; இதனுல் நாம் முக்திக் குத் தயாராகிறோம். பண்டைக் காலத்தில், வேத தர்மமே சாத்திரமாயிருந்தது; அது மனிதனின் பூரண ஆத்மதத்துவஞானத்தையும், லௌகிக தர்மங்களையும் அடிப்படையாகக் கொண்டது; மனிதனுக்கு ஆத்மாவைவிளக்கித் தன்சுபாவத்திற் கேற்றபடி வாழும் வகையைக் காட்டியது. பிறகு ஸ்மிருதி தர்மம் ஏற்பட்டது; அது மேற்சொன்னதையே இன்னுங் கடினமாகச்செய்ய முயன்றது; அது மக்களை நான்கு பொது வகுப்புகளாக வகுத்தது; இதை வேதம் சாதுர் வர்ணம் என்னும்; இன்றோ, அது கண்மூடித்தனமான யந்திரம் போன்று ஆலோசனையற்ற வாடிக்கையும் மாமூலான சமாஜ அனுட்டானமுமாகவே யிருக்கிறது; அது ஸாத்வீகமற்றுத் தாமதமா யிருக்கிறது. அது விடுதலைக்கு வழிகாட்டும் நெறியாகாது, பந்தமாகவே யிருக்கிறது.

மிக வுன்னத சாத்திரங்களைக்கூடப் புண்ணியச் செருக்கு, தூரபிமானம், சொந்த அபிப்ராயம் முதலிய அகந்தைக் காரியங் களுக்கு தூர்வினியோகப்படுத்தமுடியும். முக் திக்குத் தயாராக்குதலே சாத்திரங்களின் மிக வுன்னதப் பயன். அது சப்த ப்ரஹ்மம். ஆனால் தயாரிப்புடன் நாம் மகிழ்ந்துவிடக்கூடாது. நமது அறிவுக்கண்விழித்தவுடன் உண்மை யான முக்திக்கே நாம் விரைந்தேகவேண்டும். முக்தான்மாவும், தனது செயல்களை ஆண்ட வனுக்கே அர்ப்பணித்த முக்திஸாதகனும், அதிபுன்னத சாத்திரத்தையுந் தாண்டிச் செல் கின்றனர் (ஸ்ப்த ப்ரஹ்மாதி வர்ததே).

## கர்மார்ப்பணம்.

ஆண்டவன் ஆணைப்படி, பிரகிருதியே நமது காரியங்களனைத்தையுஞ் செய்கிறாள்; நமது சுபாவத்தின்மூலம் ஆண்டவனே காரி யத்தைத் தீர்மானிக்கிறான்; இவ் வனுபவமே

கர்மார்ப்பணத்திற்குச் சிறந்த ஆதாரமாகும். அக்கணத்தினின்று, செயலெல்லாம் ஆண்டவனுக்கே யுரியது; உன்னதல்ல; அதன் பொறுப்பும் உன்னதல்ல; பொறுப்பு, கர்மபந்தம் என்பதேயில்லை; ஏனெனில் ஆண்டவனுக்கு எவ்வகைப் பொறுப்புமில்லை; அவன் எவ்வகையிலும் எஜமான், சுதந்திரன். நமது செயல்கள் சாத்திரக்காரன் சொல்வதுபோல சுபாவ நியதமாகிறது; (இயல்புப்படி யமைகிறது). ஆதலின் அது தர்மமே; அம்மட்டுமின்றி, ஆண்டவனே அச்சுபாவத்தை ஒரு யந்திரம்போல அடக்கியாளுகிறான். நாம் அஞ்ஞான ஸம்ஸ்காரங்களில் மூழ்கியிருக்கிறோம்; ஆதலின் இந்த ஞானநிலையை எளிதில் அடையமுடியாது. ஆனால் அதைவிரைவா யடைவதற்கு மூன்று படிகள் உள்ளன:—

## கர்மார்ப்பணத்திற்கு 3 படிகள்.

த்வயா ஹ்ருஷிகேச
ஹ்ருதி ஸ்திதேன

யாதா நியுக்தோஸ்மி
ததா கரோமி.

"ஏ ஹ்ருஷீகேச, என் இதயவாஸனை நீ எப்படிப் பணிக்கிருய் அப்படிச் செய்கிறேன்." என்ற தன் உண்மையை முதலிற் கடைப்பிடித் தொழுக வேண்டும். உனது நித்திய வாழ்வில் இது பொருந்திவிடின், இரண்டாவது படியை நீ எளிதா யடையலாம்; அதாவது,

ஈஸ்வர: ஸர்வ பூதாணும்
ஹ்ருத் தே சேர்ஜ்ஜுன திஷ்டதி
ப்ராமயன் ஸர்வ பூதானி
யந்த்ரா ரூடானி மாயயா

"ஏ அர்ஜுனு! ஆருயிருளத்தில் ஆண்டவன் அமர்ந்துளான்; முக்குண மாயையால், சக்கிரத்

தேற்றி, உயிர்களை யெல்லாஞ் சுழற்றுகிறுன்" எனும் கீதாஞானத்தில் நீ வாழலாம். அப்போது முக்குணங்களின் செயலை யுன்னுட் காண்பாய்; யந்திரம் வேலைசெய்வதைச் சாட்சியாகக் கவனிப்பாய்; "நான் அப்படிச் செய்கிறேன்" என்னுது குணங்களே செய்கின்றன (குணுவர்த்தந்தே ஏவ) என்றே சொல்வாய். குணங்களின்செயலை நீ பகுத்தறியுமுன், இவ்விரண்டு படிகளிலும் ஒரு பெரிய இடருள்ளது; அதாவது உனது சுபாவத்திலுள்ள அசுத்தத்தைக் காண்பதும், உன்னைப்பிடித்த பாப புண்யம் என்கிற மனப் பான்மையுமே; உன்னை நீ முழுதும் ஆண்டவனிடம் ஒப்பித்துவிட்டாய்; அவன் உனது அசுத்தங்களை யெல்லாம் போக்குவான், என்பதை என்றும் மறவாதே; கவனமாயிருக்க வேண்டியதே உன் வேலை; நீ புண்ய பாவங்களிற் பற்றுவைக்கக் கூடாது; ஏனெனில் அவன் அடிக்கடி தனது அபய வசனத்தைக் கொடுத்துள்ளான்;—

"ப்ரதிஜாநே! நமே பக்த விநஸ்யதி" "உறுதி கூறுகிறேன்! என்னன்பன் என்றுங் கேடுறமாட் டான்" என்று கீதையில் வாக்களிக்கிறான்.

## 3. முக்குணங் கடந்த நிலை.

இரண்டாம் படியினின்று மூன்றாவது நிலையெய்துகிறது; பூரண தெய்வானுபூதியால், அல்லது ஆண்டவனருளால் தானாகவே அது வரும். இப்போது, புருஷன் திரிகுணாதீதனாகப் பற்றற்றிருக்கிறான். அம் முக்குணங்களைப் பிரகிருதி கையாளுகிறாள்; ஆனால் அவற்றின் கட்டினின்று விடுப்பட்டிருக்கிறான். சுத்த ப்ரகாசத்திலும், ஜோதியிலும் ஸத்வ குணம் மறையும்; சுத்த, சுதந்த்ர, அபார ஆத்ம ஸத்ப்ரகாசத்தில் இயற்கை வசிக்கும் என்பதை யறிவோம். சுத்த சமம், சாந்தியில் தமஸ் மறையும்; அப்போது, உரை கடந்த, எல்லையற்ற அமைதியிலும், சாந்தத்திலும் இயற்கை உறுதியாக

நிலைக்கும் என்றறிவோம். சுத்தபஸில் ரஜஸ குணம் மறையும்; அப்போது, இயற்கை அமைதியினின்றி சோதி விண்ணிலும், அனந்த சுதந்திர தெய்வ சக்திக்கடலிலுங் கலக்கும் என்றறிவோம்; பிறகு, கடவுளறிவு கடவுளிச்சையுடனொன்றாகி, அதன் சுயேச்சையான புற விளக்கமாகவே, காரியம் தானாக நிகழும். இதுவே ஆனந்தநிலை; இதில் கட்டுப்பட்டுள்ள ஸத்வ ரஜோ தமோ குணத் தடுமாற்றம் ஓய்ந்து, அதற்குப் பதிலாகச் சுதந்திரமான ப்ரகாசம், தபஸ், சமம் (சாந்தம்) பொருந்திய ஒரு பலமான ஒற்றுமை ஏற்படுகிறது. இந் நிலையடைதற்கு முன்பும், அதன் வழியிலும், ஒரு மஹா சக்தி உனக்காக நினைத்து, உனக்காகவுணர்ந்து, உனக்காகச் செயல் புரிவதை யறிவாய்; உன் உடலைப் பற்றிக் குடிகொண்டிருப்பினும், அது உன்னதல்ல, உன் உடலினுள்ளதல்ல; உன்னுடல், மனம், இதயம் முழுதும் அந்த சக்தியாலேயே இயக்கப்படுகிறது; உன்னாலல்ல, என்பதை

யுணர்வாய். அந்த நினைப்பு, உணர்வு, செயலை நீ அனுபவிப்பாய்; ஆனால் அதை நீ பற்றவோ அல்லது அதனால் பற்றுண்ணவோ முடியாது. ("கர்மாணி ப்ரவிலீயந்தே"); கடற்கரையிலடித்த அலை, உடனே திரும்பி மறைகிறது; தாமரையிலையிற்பட்ட தண்ணீர் பற்றாது உதிர்ந்துவிடுகிறது. அதுபோலவே உனது செயல்களும் எவ்விதமான தடம், குறியை எஞ்சவைக்காமல் மறைந்துவிடும். உன் மனம், இதயம், உடல் எல்லாம் உன்னதாயிராது; அவை ஆண்டவனுடைமையாகவே யிருக்கும். நீயே சச்சிதானந்தத்தின் நடுக்களனாகிவிடுவாய்; அதன் மூலம், அந்த ஆதாரத்தில் ஆண்டவனே செயல் புரிவான். இந் நிலையிலேயே ஸாதகன், தனது சேதன ஜீவனனைத்தையும் ஆண்டவனுக்கே யளித்துமுற்றும் அவன் சித்தத்திற்கரைகிறான்; இந் நிலையிலேயே

"யஸ்யநாஹங் க்ருதோ பாவோ
புத்திர் யஸ்ய நலிப்யதே"

"நான் செய்கிறேனென்னும் அஹம்பாவ மின்றி, புத்தியிற் பற்றமுக்கின்றியிருப்பவன்" என்னும் கீதையின் உரை முற்றும் நிறைவேறும். கண்ணன் மிகவும் முதன்மையாக எடுத்துரைக்கும் கர்மார்ப்பணம் இதுவே.

மயி ஸர்வாணி கர்மாணி
ஸங்யஸ் யாத்யாத்ம சேதஸா
நிராசீர் நிர்மமோ பூத்வா
யுத்தஸ்வ விகதஜ்வர:

"உன் வினைகளையெல்லாம் எனக்கே ஈந்து, உன்னறிவை அத்யாத்மயோகத்தி லூன்று; ஆசையினின்று விடுபடு; என்னதென்னும் மமதை கொள்ளாதே; உனது தாபம் நீங்கு; போர் புரி" என்று கண்ணன் உரைக்கிறான்; இப்பெரிய பூரண முக்திக்கு நீ நிஸ்ப்ருஹன் (ஆசையற்றவன்); நிர்த்தோந்தன் (புண்ய பாப மென்னும் இருவிகற்ப ஸம்ஸ்காரமற்றவன்) நிரஹங்

காரணகவும் இருக்க வேண்டுவதவசியம்; ஏனெனில் இம் மூன்றுமே ஆத்ம ஸமர்ப்பணத்தின் விரோதிகள்.

## தொந்தங் கடப்ப தெப்படி?

நீ நிர்த்தொந்தனு யிருந்தாலொழிய நிஸ்ப்ருஹனுயிருத்தலரிது; ஏனெனில், ஒவ்வொரு தொந்தமும் விகாரமே; இயல்பான மனத்தில் ஏதாவதொரு ராகத்வேஷத்தை, விருப்பு வெறுப்பை, வசியம் அருவருப்பை யுண்டாக்கிக் கொண்டே யிருக்கும்; இவை உடலின் மூலம் மனத்திற்குவக்கும் பசி தாகம், வெம்மை தண்மை, சுக இன்பதுன்பம் போன்றுகிழான தொந்தங்களா யிருக்கலாம்; அல்லது உணர்ச்சிகள் ஆசைகளின் மூலம் மனதிற்குவக்கும் வெற்றி தோல்வி, சுபா சுபம், உவப்பு வெறுப்பு, இன்ப துன்பம், பகை அன்பு இவைபோன்ற கடுத்தரமான தொந்தங்களாயிருக்கலாம்; அல்

லது பகுத்தறியும் புத்தியின் மூலம் மனதிற் குவக்கும் புண்ய பாவம், விவேகம் அவிவேகம், பொய் உண்மை முதலிய மிக வுன்னதமான தொந்தங்களா யிருக்கலாம். எல்லாத்தொந்தங் களையும் நீக்கவேண்டும். அனைத்திலும், ஆண்ட வனைக் காணும் பூரண ஞானத்தாலேயே இது கைகூடும்; அதன்மூலமே, ஆண்டவனின் அகண்ட ஜகத்காரியத்தில், பொருள்களுக்கிடை யுள்ள தனித்தனி யுறவுகளையும் அறியலாம்; அத்துடன் தொந்தங்களை விலக்கி, அனைத் தையும் இன்புடனேற்கும் பூரண பக்தியாலேயே இது முடியும்; ஏனெனில், எல்லாம் தெய்வக் காதலனிடமிருந்தே வருகின்றன; அல்லது, செயல்களனைத்தையும் ஆண்டவனுக்கு வேள் வியாக அளிக்கும் பூரண கர்மத்தினால் இஃதெய் தும்; வெற்றி தோல்வி, பெருமை சிறுமை, முதலிய தொந்தங்கள் எல்லாக் கர்மத்தையும் வழக்கமாகத்தொடரும்; இவற்றின்பால் முழு தும் உதாஸீனமா யிருத்தல் வேண்டும்.

அத்தகைய ஞானமும், அத்தகைய பக்தியும், அத்தகைய கர்மமும் ஆத்ம ஸமர்ப்பண ஸங்கற்பத்தாலும், அதைச் சாதனஞ்செய்வதாலுமே இயல்பாக உறுதியாகப் பழுக்கும்.

## அகந்தை யொழித்தல்.

நம்மீதும், நமது வாழ்வுமுறையைச் சேர்ந்தவற்றின்மீதும், பொருள்களின் உறவையும் பயனையுஞ் சுமத்தி நமக்குத் தொந்தவிலங்கிடுவது அஹங்காரமே. நமது வாழ்விலும், ஸாதனத்திலும் குறுக்கிடும் அஹங்காரம், ராஜஸம், தாமஸம், ஸாத்வீகம் என மூன்றுவகைப்படும். ஆசையின்மூலமும், துருதுருவென்று ஏதாயினும் காரியம் செய்துகொண்டிருக்க நம்மியல்பிலுண்டாகும் ஆவலாலுமே ராஜஸ வகந்தை நம்மைப் பிணிக்கிறது; வினையையும், வினைப் பயனையும் அது எப்போதுந் தொடர்ந்துகொண்டேயிருக்கிறது; இந்த ராஜஸ அஹங்காரத்தி

னின்று விடுபடுதற்கே "பலத்திலாசையுடன் வினைபுரியாதே" (மாகர்ம பலஹேதுர்பூ:) "வினையனைத்தையும் ஆண்டவனுக்கே நிவேதி" என்று நமக்குக் கண்ணனின் கட்டளையுள்ளது.

நம்மியல்பில் வேலையின்றி சொஸ்தமாயி ருப்பதற்கு உண்டாகும் ஆவலாலேயே தாமத வகங்காரம் நம்மைப் பிணிக்கிறது; சோம்பல், தளர்வு, மனக் கலக்கம், அச்சம், ஏமாற்றம், சோர்வு, ஏக்கம் இவற்றிலேயே அது எப்போ தும் மூழ்கிக் கிடக்கிறது. இத் தாமத வகந் தையை யொழிப்பதற்கே, "செயலற்றுச் சும்மா இருப்பதிற் பற்று வைக்காதே" என்னும் உபதே சம் உள்ளது; நாம் முன்னேறுவதாய்த் தோன் றினும், முன்னேற்ற மின்றி இருந்த விடத்தி லேயே நிலைப்பதாகத் தோன்றினும், பின்னே றுவதாகவே தோன்றினும், அமைதியான வுறு தியும், பொறுமையும், உற்சாகமான முயற்சியுங் கொண்டு (அநிர்விண்ண சேதஸா) சர்வ கால

மும் யோக யுக்தனு யிருக்கக் கட்டளை யுள்ளது. அறிவாலும் மகிழ்வாலும், ஸத்வம் பந்தப் படுத்துகிறது ; ஏதேனுமொரு அரைகுறை யனுபவம், புண்ணியத்தைப்பற்றிய தனது சொந்த அபிப்பிராயம், தனது எண்ணங்களுங் கொள்கைகளுமே சரியெனும் அபிப்ராயம், இவற்றில் எப்போதும் பற்றுண்டிருக்கிறது அல்லது அதன் உன்னத நிலையில், ஆண்டவன் ஆணைப்படி, நமது இச்சையை அவனுக்கு அர்ப் பணம் செய்யாமல், அதற்கு எதிரிடையாக, பரோபகாரம், நீதி, புண்யம் முதலியவற்றைக் குறித்த தனது சொந்தக் கொள்கையிலேயே அழுத்தஞ்செய்கிறது. இந்த ஸாத்வீக அஹங் காரத்தி னின்று தப்பவே, புண்ய பாபம், நற் செயல், தீச்செயல் (உபே சுக்ருத துஷ்க்ருதே) ஆகிய தொந்தங்களனைத்தையும் பற்றறத்தாண் டிச் செல்லவேண்டியிருக்கிறது.

## ராஜஸ மாசு.

ஒவ்வொரு குணமும் அஹங்காரத்தைக் கிளப்புகிறது; ஆத்ம ஸமர்ப்பணத்தை மேற் கொண்டு இன்னும் பூரண சரணாகதியடையாத ஸாதகனுக்கு ஒவ்வொரு குணமும், ஒவ்வொரு வகையில், அபாயமுள்ளதா யிருக்கிறது. "நான் பெரிய ஸாதகன், நான் இவ்வளவு பக்குவ மடைந்துள்ளேன், நான் கடவுளின் பெரிய சாத னம்" என்றெண்ணுஞ் செருக்குஸாதகனைத் தாக்குவதே ரஜோகுணத்திலுள்ள அபாயம். அல்லது, தெய்வ காரியத்தில் ஆண்டவனைக் காட்டிலுந் தனக்கு அக்கரை யதிகம், அவனைக் காட்டிலும் இன்னும் சீராக நான் நிர்வகிக்க முடியும் எனக் கடவுட்பணி என்ற பேரால் வினைப்பற்றுற்று, சிரமப்பட்டு, அதிற் புகுந்து வருந்துவதும் ராஜஸ அஹங்காரமே. ராஜஸ அஹங்காரத்துடன் நடந்து கொண்டே, ஆண் டவனே தங்கள்மூலம் செயல் புரிவதாயும், தங்

களுக்குச் செயலிற் பங்கில்லை யென்றும் பலர் நம்புகின்றனர். ஏனெனில், அவர்கள் கேவலம் புத்தியால்மட்டும் இக் கொள்கையை ஏற்றவர் களே யொழிய, உயிருடல் முழுதும் தெய்வ இச்சையால் நிரம்புமட்டும் பொறுத்திருந்தவர் களல்ல. ஆண்டவன் பிறரிடமும் உள்ளதை இடைவிடாது கருதவேண்டும்; தனக்கெனும் அவா வொழியவேண்டும்; தனது பூரண ஆத்ம ஞான ஜோதியால் நமது மயக்கங்களைக் சட் டோ டொழிக்குமட்டும், நமது உள் விருத்தி களையே கவனித்துக்கொண்டு, உள்ளேயே கவ னித்துக் கொண்டிருக்கவேண்டும்.

## தாமத மாசு.

தமோகுணத்தின் அபாயம் இருவகைத்து:-

(1) தனது தமஸுடன் ஒன்றுபட்ட புருஷன், "நான் மெலிந்தவன், பாவி, தீனன், மூடன், ஒன்றிற்கும் உதவாதவன்,

இவனைவிடத் தாழ்ந்தவன், அவனைவிடக் குறைந்தவன், அதமன், என்மூலம் கடவுள் என்னசெய்வார்" என்று தளர்வது ஒரு அபாயம். தனது கருவிகளான பக்தர்களின் நிலையற்ற வலிவு மெலிவுகளுக்கு ஆண்டவன் கட்டுப்பட்டுள்ளவனோ? அவன் ஊமையைப் பேசவைக்க வல்லவனன்றோ? முடவனை மலைதாண்டச் செய்ய வல்லவனன்றோ?

" மூகம் கரோதி வாசாலம்
பங்கும் லங்கயதே கிரிம் "

(2) சற்று அமைதி யனுபவித்ததும், தொழிலற்றுச் சும்மா இருக்கும் நாஸ்திகச் சாந்தத்திற் காளாகி "இனி எனக்கொரு வேலையுமில்லை, விடுபட்டேன், சாந்தமடைந்து விட்டேன்" என்றெண்ணி, வாழ்வையும் வினையையும் புறக்கணித்து,

ஒரு வேலையுமின்றி, சொஸ்தமாயிருக்கும் சாந்தத்திற் பற்றுவைப்பதே இரண்டாவது அபாயம். நீயும் ப்ரஹ்மன்; உன் மூலம் தெய்வ சக்தி செயல்புரிகிற தென்பதை எப்போதும் நினை; ஆண்டவனின் சர்வ வல்லமை, லீலானந்தம் இவற்றை யனுபவிக்கவே. எப்போதும் முயலு. உலகை யொற்றுமைப்படுத்தச் செயல்புரி (லோக ஸங்க்ரஹார்த்தர்) என்று அவன் அர்ஜுனனை யேவுகிறான்; ஏன்? உலகம் பிரகிருதியில் லயமாகிவிடவேண்டுமென்பது அவன் விருப்பல்ல; தன்னைப் போலவே யுன்னையும் வினைபுரியவேஅவன் வற்புறுத்துகிறான்;

"உத்ஸீதேயுர் இமே லோகா
ந குர்யாம் கர்மசேத் அஹம்",

"நான் வினைபுரியாவிடின் இவ் வுலகங்கள் தாமதத்தின்வாய்ப்பட்டு, பிரகிருதியில்மூழ்கிவிடும்"

என்று குறிக்கிறான். செயலின்மையிற் கட்டுப்படுவது, நமது செயலைக் கடவுளுக்குக் கொடுத்ததாகாது; அது நமது தாமத அஹங்காரத்திற்கே கொடுத்ததாகும்.

## ஸத்வ மாசு.

தனது விசாரத்தால், ஸாதகன் ஒரு சார்பான முடிபிற் கட்டுண்டு, ஏதோவொரு கிரியை, அல்லது ஸாதனமுறை, ஒருகுறித்தயோகசித்தியின் இன்பம் (சுத்தனாதல், ஒரு குறித்த சத்தி பெறல், கடவுளுறவிலேயே ஆனந்தம், முக்தியுணர்வு, அதையே பற்றித் திரிதல், போன்றன.) இவற்றிற்கே வசப்பட்டு இந்த அஹங்காரத்தால் வேறெதையும் கருதாதிருப்பதே ஸத்வகுணத்தின் அபாயம். யோகம் உனக்கல்ல வென்பதை நினை; மேற்சொன்னவையெல்லாம் யோகசித்தியின் பங்குகளே ஆனால் இவை யோகசித்தியின் நோக்கமல்ல; ஆண்டவனிடம்

எவ்வுரிமையும் பாராட்டுவதில்லையென முதலிலேயே உறுதிபூண்டிருப்பதையெண்ணு; அவன் தன்னிச்சைப்படி கருவதையே பெற்றுக் கொள்வெதென் றுறுதிபூண்டே யோகந் தொடங்கியுள்ளாய்! ஆனந்தத்தைக் குறிக்குங் கால், தன்னலமற்றவன் ஆண்டவன் விரும்பினுல், தெய்வஸாமீப்யத்தின் இன்பத்தைக்கூடத் துறந்துவிடுவான். அதியுன்னதமான ஸாத்வீக அஹங்காரம், மோட்சம் விழையும் நுட்ப மடமை, இவற்றினின்றும் நீ விடுபடவேண்டும். இன்ப துன்பத்தைப் பற்றின்றித் தாங்கவேண்டும். அப்போதே நீ கீதை குறிக்கும் பூரண சித்தனுவாய்.

## யோக முறை.

முடிவாக, இவையே யோகமுறை:— (1) ஆத்ம ஸமர்ப்பண ஸங்கற்பம், (2) ஆத்மஞானத்தால் ஆதாரத்தினின்று விலகியிருத்தல், (3)

எங்கும், அனைத்திலும், எல்லாச் சம்பவங்களி லும் ஆண்டவனைக் காணல்; வினைப்பயன்களு டன் வினையையும் ஆண்டவனுக்கு நிவேதித்தல்; அதனால் மடமை, அகங்காரம், தொந்தம் ஆசைகளினின்று விடுபடுதல்; இவ்வாறே நீ சுத்தனாகவும், முக்தனாகவும், சித்தனாகவும், பூரணானந்தனாகவும் ஆகலாம். ஆனால் ஒருமுறை சங்கற்பித்துத் தொடங்கிவிடின், பலமான இயற்கை நெறியைப்பற்றி, தெய்வ சக்தியே ஸாதனத்தை நடத்துவாள். அனுமதி, ஸ்மிருதி (நினைவு) இவையே உன்னிடம் வேண்டுவன. அனுமதியாவது சம்மதித்தல்; முடிவான யோகசித்தியையே முற்றும் நிலைப்பாகச் சம் மதித்து உன் மனத்திலூன்றி நிற்கவேண்டும்; யோகத்தில் அவ்வப்போது செய்யும் அப்யாஸங் களுக்கும் ஸாதன நிலைமைகளுக்குந் தக்கபடி, உன்னுள் அல்லது புறத்தே நிகழும் சம்பவங் களுக்குச் சமயோசிதமான சம்மதத்தையே தரவேண்டும்; நன்மை வந்தால் பொங்கிமகிழ்

ந்து போகாதே; திமையில் மனங் கசக்காதே; ஒன்றை நிலைநிறுத்த உள்ளங் தடுமாறி, மற்றொன்றையொழிக்கவும் முயலாதே; முடிவாகச் சாதிக்கவேண்டிய சித்தியையே மனத்திலிறுத்து. யோகஸாதன முறைகளுக்கு அமைதியாயிணங்கு; அதன் தற்காலப் பயன்களையே முடிவாகக் கொள்ளாதே; இதுவே சமயோசிதமான சம்மதமாகும்; ஆசை, பிரயாசையின்றி, இச்சா சக்தியைப் பயன்படுத்தி, இன்னது வருமென்று எதிர்பார்த்தே, பயன்களை யேற்பது நிலையான அனுமதியாகும். இந்த நிஷ்காம இச்சை, தீவிர ஆர்வம், யோகமார்க்கத்தையும் சித்தியையும் இடைவிடாது நினைத்தல், இவையே ஸாதகனுக்கு வேண்டிய உறுதியும் (த்ருதி) உற்சாகமுமாகும். இன்னும் சித்திவரவில்லையே யென்ற வியாகூலமும் கிளர்ச்சியும், ஆவலும் தீவிர வேகந் தரினும், சக்தி விரிவிற் குறைந்தனவாகும். இவற்றால், யோக ஸாதனத்தில் கலக்கமும், தளர்வும், தீவிரமான இன்பதுன்பமும்

விளையுமல்லால், அவ்வளவு விரிந்த ஆனந்தங் கைகூடாது. பண்டை யுகத்தினரைப்போல், இந்த யோக ஸாதகர்கள் தீரராயிருத்தல் வேண்டும்; தீரம் என்ற மொழி உபநிடதங்களால் மிக வுங் கொண்டாடப்பெற்றது. ஸ்மிருதி, ஸ்மரணை, அல்லது யோகசிந்தனையில் நீ அப்ரமத்தனாக, மறதியின்றி, அசட்டையின்றி யிருத்தல் வேண்டும்; குணங்களால் மோதித் தாக்கப்படுவதால் மறதியுண்டாகிறது; அம் மறதியால்தான்யோகி ப்ருஷ்டனாகி, உறுதி வழுவிப் பாதைதவறி வீழ்ந்துழல்கிறான். ஆனால் பிரமாதத்தால் மயங்கி வீழ்ந்து, துயரப் படலத்தாற் கௌவப்படும் போதும் நீ கலங்காதே; நீ அதோகதியில் என்றும் மீளமுடியாது வீழ்ந்துவிடமாட்டாய்; ஏனெனில், உன் பொறுப்பை யேற்றுக்கொண்டிருப்பவன் ஆண்டவனே. அதுவே உனக்கு நலமென்று அவன் சித்தம் நினைப்பதாலேயே நீ தடுமாறுவதும் என்றறி. அடிக்கடி விழுந்தெழுந்தே, குழந்தை நடை பயிலுகிறது; அதுபோலவே

நீயும் சரிப்பட்டுவிடுவாய். யோகத்தையும் அதன் பயனையும் நினைக்குமிடத்தில், கீதை சொல்வதுபோல் இடைவிடாமல், எல்லாப் பொருள்களிலும்; சம்பவங்களிலும் ஆண்டவனை இடைவிடாது மறவாது நினை; நித்யானுஸ்மரணைசெய்; அப்படியாயின் நீ அப்ரமத்தனுயிருத்தலும் அவசியமில்லை. எடுத்ததும் பூரண சரணாகதியடைந்தவரைப்பற்றிக் கேள்வியேயில்லை; அவர்கள் வழி எளிதும் விரைவுமானது.

## சித்திக்கு நான்கு தேவைகள்.

யோகவழி காட்டும் சாத்திரம், உத்ஸாகம், குரு, காலம் இந் நான்கும் யோகத்திற்கு அவசியமென்று ஸகத்ஸுஜாதியத்திற் கூறப்பட்டுள்ளது. நான் காட்டிக்கொண்டிருப்பதே உன் வழி; அனுமதியும் நித்யஸ்மரணையுமே உனக்கு வேண்டிய உற்சாகம்; ஆண்டவனே குருநாதன்; மற்றதற்கெல்லாம் காலமே வேண்

டும். உனக்கு ஞானோதய மாகும்போது, ஆண்டவனே குருநாதனென்பதைக் காண்பாய்; உன்னுட்புறத்தில் நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சியும், யோக ஸாதனத்தை இயல்பாக நடத்துதற்கு ஆண்டவனின் எல்லையற்ற அறிவாலேயே நுட்பமாக ஏற்படுத்திக் கணித்துக் குணிக்கப்பட்டதென்றறிவாய். உனது உட்புறம் நடப்பதெல்லாம், ஒன்றிற்கொன்று பொருந்தி அபூரணத்தை விலக்கிப் பூரணத்தைத் துலக்க, ஆண்டவனாலேயே வகுத்துத் தொகுக்கப்பட்டதென்றறிவாய். ஆண்டவனின் அனைத்தும் வல்ல அன்பும், அறிவும் உன்னை முன்னேற்றுதற் குழைக்கின்றன. ஆதலின் காலதாமதமாகிறதென்று ஆயாசப்படாதே; காலம் மிக நீடித்தாலும் வருந்தாதே; ஆனால் குறைகளுந் தடைகளுங் கிளம்புகையில், அப்ரமத்தனாக, தீரனாக உற்சாகியாயிரு; மற்றதற்கெல்லாம் ஆண்டவன்மீது பாரம் போட்டுவிடு; நீண்டகாலம் அவசியம்; உன்னுள் மகத்தான காரியம் செய்யப்படுகிறது; உனது

மனிதவியல்பை முற்றுந் தெய்வவியல்பாகமாற்ற வேண்டியதே காரியம். பல நூற்றாண்டுகள் பிடிக்கத்தக்க பரிணாமத்தைச் சில ஆண்டுகளில் நிறைவேற்றவேண்டியிருக்கிறது. இதற்குத் தாராளமான காலத்தைக் கொடுக்க நீ பின்வாங்கக் கூடாது. எளிதில் விரைவிற் பலனளிக்கும் மற்ற யோக வழிகள் உள்ளன; அவை உனக்கொரு கிரியை தந்து, உன்னையே அப்யசிக்க விட்டுவிடுகின்றன. நான் ஒரு யோகாப்யாசஞ்செய்கிறேன்; இன்று இத்தனை பிராணாயாமஞ்செய்தேன்; நாளை இன்னும் அதிகஞ் செய்வேன்; இன்றைக்கு அதிகநேரம் ஆஸனங்கட்டினேன்; இவ்வளவு அதிகமாக ஜெபம் உருவேற்றினேன்; நான் இவ்வளவு முன்னேறியிருக்கிறேன், என்று கணக்கிடும் மகிழ்வை அவை உன் அகங்காரத்திற்குத் தருகின்றன. ஆனால், நீ இந்த வழியில் ஒரு முறை புகுந்தால் அதிலேயே ஒட்டிக்கொண்டிருக்கவேண்டியிருக்கிறது; இவையெல்லாம் மனிதர் விதித்த ஸாதன முறைகள்; இவை

அனந்த சக்தியால் வழிகாட்டி நடத்தப்படுவன வல்ல; மஹா சக்தியின் ஸாதனமுறைகள் மௌன மாயிருக்கின்றன; சிலவேளை முடிவின்னதென் றும் காணமுடிவதில்லை. இங்கு முன்னேறி அங்கு தங்கிவிடும். ஆனால், முடிவில் அது தான் இயற் றிய மிகப் பெரிய காரியத்தை வெற்றியுற விளக்குகிறது. செயற்கை வழிகள் மனித மூளை யால் யோசித்துத் தோண்டப்பட்ட கால்வாய் களைப் போன்றன; நீ எளிதாயும், சுகமாயும், உறுதியாயும் அதனூடு செல்லலாம்; எனினும், அது குறித்த ஓரிடத்தினின்று மற்றோரிடத் திற்கே உன்னைச் செலுத்தும்.

நமது வழியோ எல்லையற்ற விரிகடல். அதில் நீ உலகெலாம் பரந்துலாவி யனந்த சுயேச்சையிற் சேரலாம்.

அம்புவி முற்றும் ஆணையா லியக்கும்
அன்னையே சக்தியாய், யாவும்
இன்பமென் றறியும் பிரமவித் தையெனும்
இறப்பிலாக் கப்பலி லேற்றி,

நம்புத லாலே, யடைக்கல நோக்கி,
நடத்துவன் சுதந்திரக் கடலில் —
எம்பெரு மானேம் மருட்பெருஞ் சோதி
யிறைவனோ டுலாவுவோம் வாரீர்!

ஒரு கப்பல், சுக்கான், திசைகாட்டி, நீராவி சக்தி சமர்த்தனான மீகான் இவையே உனக்கு வேண்டியதெல்லாமாகும். ப்ரம்ம வித்தையே கப்பல்; அன்புமிக்க நம்பிக்கையே சுக்கான்; ஆத்மஸமர்ப்பணமே திசைகாட்டி; ஈசனணையால் உலகையாக்கி யளித்துத் துடைக்கும் பரா சக்தியே செலுத்தும் ஆவிவன்மை; ஈசனே மீகான். ஆனல் அவனுக்குச் சுதந்திரமான செயல் வழியுண்டு; ஒவ்வொன்றிற்கும் தன்னிச்சைப்படியே அவன் காலங்குறித்துள்ளான். அவன் வழியை நோக்கி அவனுக்காகக் காத்திரு. சாத்திரத்தை யேற்றுக் குருவைப் பணியவேண்டிய அவசியத்தை யறி; நன்கு பயற்றி ஆராய்ச்சிக்கும் பகுத்தறிவிற்குந் தயா

ராக்குமுன்னரே, ஐரோப்பியர் மூளைக்குச் சுயேச்சை கொடுக்கவேண்டுமென வற்புறுத்து கின்றனர். பண்படாத அதன் மனோபாவனை, விருப்பங்களுக்கு மூளையைத் தன் போக்குப் படி சுயேச்சையாய் விட்டுவிடுவதையே விவேக மென்கின்றனர். நீ அவர்களைப் பின் பற்றாதே.

தத்துவ வாதங்களிலும், வேதாந்த நுட் பங்களிலும், அத்வைத, மாயாவாத, விசாரங் களிலும் இஷ்டப்படித் திரிதல் இக் காலப் பாங்கா யிருக்கிறது; ஆத்மானுபவத்தைக் கரு தாமல், மக்கள் இவற்றையே முதன்மையென முன் வைக்கின்றனர். இவர்கள் மாதிரியை நீ பின் பற்றாதே; வழியில் கேள்விகள் கேட்டுக் கொண்டு காலவிணுக்கிக் கலங்காதே; உன் னுள்ளே விக்ஞானமாகிய கடவுளறிவு விழித் தெழும்போது, இக் கேள்விகளெல்லாம் விரி வாகத் தெளிவாக உனக்கு விளக்கப்படும். தத்

துவ ஞானத்திற்கும் ஓரிடமுண்டு; ஆனல் ஆத்மானுபவத்தின் வேலைக்காரியாகி, அதைச் சார்ந்தே, அதன் வண்மையிலேயே பிழைத்துச், சமயத்தில் அதற்கு முன்னே வழிநடத்தலே அதன் பயனுகும். தனியே நோக்கின், அது வெறும் வரண்ட பாண்டித்யமே; அது துணை செய்வதினும் இடர் செய்வதே பெரும்பாலும் அதிகம். நமது யோகப்பாதையைக் கைக்கொண்ட பிறகு அதன் சாத்திரத்தையே மாசறப்பற்று; வீண் கேள்வி கேட்காதே; சந்தேகப்படாதே; மனதை அத்யாத்ம ஞான வொளிக்கு இணக்கமாக வைத்துக்கொள். உனது ஆத்மானுபவத்தைப் பலமாகப் பற்று; உனக்கு விஷயம் புரியா விடத்தில், அறிவொளிக்காகக் காத்திரு; யோகவழியில் ஏற்கெனவே சென்று தேர்ந்தவர்களைச் செருக்கின்றித் துணைக் கொள். எப்போதும், பொறுமையோடிரு. பதற்றமான குறுகிய முடிவுகள் செய்யாதே. மென்மேலும், பூரணனுபவமும்

பரிபூரண ஞானமும், வருமட்டுங் காத்திரு; உன்னுள்ளிருந்து துணை தந்து நடத்தும் ஜகத் குருவையே நம்பிச் சார்ந்திரு.

## லீலை.

மாயாவாதத்தையுந் தற்கால அத்வைத உபதேசங்களையும் பற்றிச் சில மொழிகள் கூற வேண்டி யிருக்கிறது; ஏனெனில், அவை இப் போது மிகவும் பிரசித்தமாகி மக்கள் மூளை யைக் கலக்குகின்றன. ஐரோப்பியரின் காரண வாதமும், அஞ்ஞாத வாதமும் அவற்றுட் புகுந் துள்ளன; சங்கரர் இருப்பின், தானே இதற் குக் காரணமென்று வியப்புடன் காண்பார்; ஒரு பக்கத்தையே வாதிக்கும் தத்துவ சாத்தி ரங்கள் உண்மையை எப்போதும் பூரணமாகக் காட்டா. ஆண்டவன் படைத்த வுலகு கடுமை யான தர்க்க வாதகமல்ல; அது ஒரு இன் னிசைப் பாட்டைப் போன்றது; அதிற் பல

வேறுபாடுகளுள்ள, எல்லையற்ற பண் வரிசைகள் உள்ளன; ஆண்டவன் சுதந்திரன்; சர்வாதிகாரி; அவன் இன்னவிதமா யிருக்கிறானென்று தர்க்கத்தால் வாதித்து விளக்கமுடியாது. சர்வ சமயத்திலுமுள்ள வுண்மையை அங்கிகரிப்பதே உன்னதமான சமயம்; அவ்வாறே, தத்துவ சாத்திரங்க ளனைத்தையும் ஒப்பி, ஒவ்வொன்றிற்கும் உரிய இடங் தருவதே உன்னதமான தத்துவசாத்திரம். மாயையென்பது ஒரு அனுபவம்; அதைச் சங்கரர் முதன்மையாகத் தீவிரமாய் வலியுறுத்தினர்; ஏனெனில், தன்னனுபவத்திற்கு மிகத் தெளிவுற விளங்கியது அதுதான். உனக்கு மாயையென்ற மொழி வேண்டாம்; அதைக் கீழ்க்கடைக்கு விட்டுவிடு. "லீலை" என்ற பாவனையிலொன்று. "மாயை"யை விட இது ஆழ்ந்த நூண்பொருளுடைத்து. "லீலை" மாயையெனும் பாவனையைத் தன்னுளடக்கி, அதனினும் மேலோங்கி விரிந்திலங்குகிறது. பொருள்

களெல்லாம் வீண் ஏமாற்றம் என்று மாயா வாதங் கூறுகிறது; லீலையில் அந்த சம்பந்த மில்லை; இந்த "மாயை" உனக்குப் பயனில்லை; மதுரையிலும், பிருந்தாவனத்திலும், கண்ணனோடுகூடி விளையாடவே நீ ஏற்பட்டவன்.

ஆண்டவன் ஒருவனே; ஆனால் தனது ஏகத்திற் கட்டுப்பட்டவனல்ல; பலவாய் விளங்கும் ஒருவனாகவே நாம் அவனை இங்கு காண்கிறோம். அவன் அப்படிச் செய்யாதிருக்க முடியாதென்பதில்லை; அது அவனிச்சை; ஆதலின் ஒருவன் பலவாகிறான்; இந்தத் தோற்றத் திற்கப்பால், அவனை இப்படிப்பட்டவன், ஒன்று, பலவா என்றுரைக்கமுடியாது. இதையே உபநிடதங்களும், புனித நூல்களும் வலியுறுத்து கின்றன. உள்ளது அவனே; அவனன்றி வேறில்லை (ஏகமே வாத்விதீயம்). ஆனால் அவனே "இம் மனிதன், அதோவுள்ள பெண்; அந்த நீலச் சிறகு விரி பறவை, இந்தச் செய்யு

இறகுடைய பட்சி." அவன் சாந்தன், அனந்தன்; ஜீவன் அவனே. "நான் அஸ்வத்த மரம், நான் காலன், நான் அக்னி, நான் வைஸ்வானரன்; நானே உணவைச் சீரணிக்கும் தீவனம், நான் வியாசன், நான் வாசுதேவன், நான் அர்ஜுனன்" என்று கீதையிற் கண்ணன் உரைக்கிறான். உள்ளதெல்லாம் அவனுடைய அனந்த ஸத்திலுள்ள (எல்லையற்ற உண்மையிலுள்ள) சைதன்யத்தின் (அறிவின்) விளையாட்டே; அவனுடைய சைதன்யப்ரகாசங்களே; ஆதலின் அனைத்தும் உண்மையே. பிரம்மன் சங்கர்ப்பங்களுக்கேற்றபடி தன்னை விளக்குகிறான்; பிரம்மன் சர்வ சுதந்திரன். கால தேச வர்த்தமானங்களிற் கட்டுப்பட்டவனல்ல; இப்புவியாடலிற் சிக்கியவனல்ல; அவன் எல்லையற்றவன், அளவிற் கடங்காதவன்; உலகம் அவன் வடிவே; ஆனால் அவன் அவ்வடிவினும் அகண்டமானவன், உலகம் பொய் மாயையல்ல; இப்போது நாம் அதைப்

பொய் மடமையாற் காண்கிறோம்; அதனாலேயே அதுவும் பொய்யாகக் காண்கிறது; உண்மைவடிவிற் காணின், அது பரம்பொருள் விளக்கமென்றேயறிவோம்; அப்போது அது மாயமல்ல; சச்சிதானந்தப் பரம்பொருளின் லீலை யென்றே விளங்கும். அவன் அதிலுள்ளான்; அது அவன் மயத்திலுள்ளது. உலகம் சர்வமங்களனின் ஆனந்த விலாஸம்; ஜீவன் தன் மனமயக்கால் உள்ளும் புறமும் கற்பித்துக்கொண்ட தீமையே மாயை· நாம் அவனைப் பற்றிப் பலவிதமாகக் கண்டு நினைக்கிறோம்; அவன் அவற்றில் எவ்வகையிலுங் கட்டுப்பட்டவனல்லன். அவன் கட்டுப்பட்டவன் எனும் மாயத்தினின்றே நாம் விலகவேண்டும். கடவுளில்லை, சைதன்யமில்லை, பொருள்கள் தனித் தனியே யுள்ளன; என்னும் மடமையே மாயை; அது எல்லையற்றதை மட்டுப்பட்டதாகவும், சுதந்திரத்தை பந்தமாகவும் கண்டு மயங்குகிறது. இந்த மடமையினின்றே நாம்

விடுபடவேண்டும். ஒரு முறை நாரதர் ஒவ்வொரு கோபியின் வீட்டுள்ளும் சென்று நோக்கினர்; ஆங்காங்கு வெவ்வேறு செயலில், வெவ்வேறு வகையாகக் கண்ணன் ஈடுபட்டிருந்தான்; ஆயினும், கண்ணன் என்றும் ஒருவனே. கோபியருடன் கண்ணன் இப்படி விளையாடிய கதை உனக்குத் தெரியும். இக்கதையின் பக்தி பரமான பொருள் உனக்குத் தெரியும்; அதைத் தவிர அவனுடைய விஸ்வ லீலைக்கு இது அரிய உபமானம். அவன் சர்வன்; யாதும் அவனே. வேறெனத் தோன்றும் பிரகிருதியுடனும், செயலுடனும் கூடிய ஒவ்வொரு புருஷனும் அவனே; அதேகாலத்தில் அவன் பரப்ரக்ருதியான ராதையுடன் கூடிய புருஷோத்தமனாக விளங்குகிறான். இவற்றையெல்லாம் அவன் இச்சாமாத்திரத்தில், தன்னுள்ளே இழுத்துக்கொண்டு, இச்சாமாத்திரத்தில் மீண்டும் வெளியிட முடியும். தன் விருப்பப்படியே அனைத்தையும் விழுங்க

வும், விளக்கவும் முடியும். ஒரு நிலையினின்று நோக்கினால், அவை அவனுடன் ஒன்றே; இன்னொரு நிலையில் ஒன்றாகவும் வேறாகவும் காணப்படும்; மற்றொரு நிலையில், எப்போதும் வேறாகத்தோன்றும்; ஏனெனில், புருஷப் பிரகிருதி என்றுமுள்ளன; அவன் விருப்பப்படி அவை மறைந்துந் தோன்றியு மிலகும்; இவ்விஷயங்களைக் குறித்து வாதாடுவதிற் பயனில்லை; ஆண்டவனைக் காணுமட்டும் காத்திருந்து உன்னையும் அவனையும் நீயே தெளிந்துகோள். பின்பு வாதமும் தர்க்கமும் வீண்மையாகும்.

## தெய்வ சக்திக் கதிர்.

இவற்றை யனுபவிப்பதே நமது குறிப்பு; வாதவிசாரணையல்ல. தெய்வவடிவில், அவனில், அவனுடன் கலந்து வசிக்கவேண்டும்; அதாவது அவனுடைய ஸாரூப்யம், ஸாமீப்யம், ஸாயுஜ்யத்தைப் பெறவேண்டும்; அவனுடைய இன்

பத்திற்கும், சக்திப் பெருக்கிற்கும் வாய்க்காலா யிருக்கவேண்டும்; அவனுடைய செயல்களுக்குக் கருவியா யிருக்கவேண்டும்; இதுவே அவனுடைய கட்டளை. அசுபத்தினின்று விலகிச் சுத்தமடைந்து, அவனுடைய ஸ்பர்சத்தால் நமது ஆவி ரூபாந்திர மடையவேண்டும்; அந்த ஸ்பர்சம் திவ்ய மின்சார சக்தி; அதன் நிறைவுள்ள மின்சார யந்திரங்களாகவே (மின் பொறி = Dynamo) உலகில் நாம் செயல்புரிய வேண்டும்; அதையே மனித வர்க்கத்திடை இன்பஞ்சிலிர்க்கப் பரவும்படி நாம் பாய்ச்ச வேண்டும். நம்முள் ஒருவர் எங்கு நிற்பினும், நம்மைச் சுற்றி நூற்றுக் கணக்கானவர்கள் கடவுட் சோதியும், தெய்வ சக்தியும், தெய்வ நிறைவும், ஆனந்த பரிபூரணமும் பெற்றிலகவேண்டும். சர்ச்சுக்கள், மத ஸ்தாபனங்கள், வேதாந்த நூல்கள், தத்துவ சாத்திரங்கள், முதலியவை யெல்லாம் மனிதனைக் காக்கமுடியாமற் போயின; ஏன்? அவை மனித மூளையால் ஏற்

பட்ட மதங்கள், சித்தாந்தங்கள், சடங்குகள் ஸ்தாபனங்கள், ஆசார சுத்தி, தர்சனம், இவற்றிலேயே துருதுருத் தலைகின்றன. இவையெல்லாமா மனித வர்க்கத்தைத் தெய்வ பரிபூர்ணத்திலுய்த்துக் காக்கும்! அவை அவசியமானதை அசட்டை செய்துவிட்டன; அதுவே ஆத்ம சக்தியும், ஆத்ம சுத்தியுமாகும். அந்த அவசியமான ஒரு பொருளுக்கே (ஆன்மாவிற்கே) நாம் மீண்டுஞ் செல்லவேண்டும். மனிதஜாதியின் சுத்த பரிபூரணத்தையே ஏசுநாதர் உபதேசித்தார். அதை நாம் மீண்டும் கைக்கொள்வோமாக! ஆண்டவனுக்கு நிறைவான பணிவும், அடைக்கலமும், தொண்டுமே முகம்மது நபியின் உபதேசம்; அதை மீண்டும் நாம் கைக்கொள்வோமாக! பரிபூரண ப்ரேமை, மனிதனிடம் கடவுளைக் கண்டுகளித்தல், இவையே சைதன்ய தேவரின் உபதேசம்; மீண்டும் இதைக் கைக்கொண்டொழுகுவோமாக! எல்லா மதங்களும் ஒன்று; மனித

னிடம் தெய்வத்தன்மையுள்ளது என்று ராம கிருஷ்ணர் உபதேசித்தார்; அதையே மீண் டும் கைக்கொண்டொழுகுவோமாக! இச் சிற் ருறுகளை யெல்லாம் ஒன்றுகூட்டி அனைத்தை யும் சுத்தப்படுத்தி ஈடேற்றும் ஒரு அகண்ட கங்கை யாக்குவோமாக! முற்காலத்தில் பகீர தன், சாம்பலாய்ப் போன தனது மூதாதை களான சகரபுத்திரர் மீது கங்கையைப் பாய்ச்சி அவர்களை உயிர்ப்பித்தான்! அம்மாதி ரியே, உயிர்ப்பிணமாக வாழும் இந்த உல காயத மக்களின் ஆன்மா புதுப் பிறப் பெய்தி உயிர் துளிர்த்துத் தழைத்தோங்கவும், உல கில் ஸத்யயுகம் நிலவுமாறும், அந்த அகண்ட கங்கையை நாம் பாய்ச்சுவோம். ஆனால், லீலை அல்லது யோகத்தின் முழு வுத்தேசமும் இதுவே யல்ல; மனிதனை மீண்டும் மீண்டும் உயர்த்தி, இன்னும் இன்னும் புனித உன்னத மனிதனுக்கி, இன்னும் மேன்மேலும் மனித னிடமுள்ள தெய்வத்தன்மையை வளர்த்துத்

துலக்கி, மீண்டும் மீண்டும், மேன்மேலும், மண்ணுலகில் விண்ணுலகை விளக்கவே அவதார புருஷர்கள் அடிக்கடி இங்கு வருகின்றனர். இந்த வேலை முடிவுற்று நமது காரியம் நிறைவேறவேண்டும்; இங்கு, இந்த ஜடவுலகிலும், அனைவரும் சச்சிதானந்த சித்திபெற வேண்டும்; இதுவே யோக லீலையின் முழு நோக்கம்; தனது சொந்த முக்திக்காவது, சிலருடைய முக்திக்காவது, பாடுபடுபவன் வெற்றியடைந்தாலும், அவன் செயல் மிகவும் அற்பமே யாகும்; சிறிது வென்றாலுந் தோற்றாலும், சிறிது காலமே நின்றாலும், பொருட்டல்ல; மனித ஜாதிக்கு ஆத்ம சாந்தமும், ஆனந்தமும், சுத்தமும், தெய்வ பரிபூரணமும் கொண்டுவரவே வாழுவோனின் செயல் எல்லையற்ற பெருமையுள்ளது.

ஓம் சக்தி

# சங்க சங்கீர்த்தனம்.

(இராகம் கல்யாணி, தாளம் திரிஸ்ர திரிபுடை)

பல்லவி

வாழிய நர தேவர் சங்கமே!
ஜெயஜெய ஜெயஜெய ஜெயஜெய (வா)

ஆழிசூ ழுலக மெல்லாம் அகண்ட பாரதம்
வாழி யமர வாழ்வி லோங்கி
வளமை பொங்கியே—இன்ப
வளமை பொங்கியே—ஜெய (வா)

கோவிலாக உலகமெல்லாம் குலவி வாழ்கவே!
சாவும் இருளும் அடிமை வறுமை
தளர்ந்து தேய்கவே—இன்பம்
வளர்ந்து பாய்கவே—ஜெய (வா)

கடவுள் மனிதர் கடவுட்புலவர் கடவுள்வேதமும்
கடவு ளறிவுங் கடவுட் செயலுங்
கதிர்விட் டோங்கவே—யோகக்
கதிர்விட் டோங்கவே—ஜெய (வா)

வீர நினைவும், வீர வினையும் வீர சக்தியும்
வீர முரசு விண் முழங்க
வெற்றி கொட்டவே—ஆத்ம
வெற்றி முற்றவே—ஜெய (வா)

வேறு.

பொன்றரு மின்பப் புதுமணக் காதலிற்
போகமும் யோகமும் மலரும்!
என்று மழகும் இளமையுந் தெய்வமும்
இக பரத்துடன் வளரும்—ஆன்மச்
சுகக் கனிபழுத் தொளிரும்—ஜெய (வா)

அல்லற் படுத்தும் அகந்தைச் சமர்புரி
அரக்கன் எரிந்து மடிந்தான்—பொய்
யசுரன் திகைத்து மறைந்தான்!
எல்லாம் சக்தி மயம் எல்லாம் சக்தி வயம்
எல்லாமுமே சக்தி யருளே
எல்லாமுமே சக்தி விரிவே—யிங்
கெல்லாமுமே சக்திப் பொருளே—ஜெய (வா)

எல்லா வுலகிலும் இன்பச்சிற் சக்தியின்
இச்சை விளங்கிட வுழைப்போம்
எல்லாம் சக்தி மயம் எல்லா மின்ப மயம்
என்னு மறிவுறத் தழைப்போம்—
எல்லாருமே சக்தி மைந்தர்,
எல்லாருமே புவி வேந்தர்—உண்மை
எல்லாருமே ஜீவன்முக்தர்
இங் கெல்லாருமே சுத்த சித்தர்!—ஜெய(வா)

# பகவான் அரவிந்தர்

---

கார்கொண்ட வள்ளலே! கதிர்கொண்ட சோதியே!
கடல்கொண்ட கருணை விழியே!
கண்கொளா மின்விசுக் கனிமுறுவலே! என்
கருத்தினைக் கொண்ட வழகே!
சீர்கொண்ட மார்பே! செயங்கொண்ட கையே!
சிரங்கொண்ட ஞான வளமே!
தேவமனிதர் குலத் திருவோங்கு சக்தியே
தேடரிய முத்தி முதலே!
யார்கண்ட போதிலு மகந்தையிரு ளற்றடிக்
காளாகு மன்பு மயமே!
அவனிமிசை யத்யாத்தம கற்பகச் சோலைதனை
யருளூற்றி வளர வைத்தாய்!
பார்கொண்ட வாழ்வைப் பரங்கொண்ட வாழ்வுடன்
பங்குகொண் டோங்க வைத்தாய்!
பரமபரி பூரண னந்தனே யனந்தனே
பகவனே யரவிந்தனே

---

